11-5

# ஸ்ரீ சிவஞான பாலைய சுவாமிகள்

# மும்மணிக்கோவை

## மூலமும் உரையும்








பொம்மபுர ஆதீனம்

மயிலம், பொம்மையபாளையம்




# மயிலம் பொம்மபுர ஆதீனம்

மயிலம், பொம்மையபாளையம்

# குருபூசை மலர்

விக்கிரம ஆண்டு வைகாசித்திங்கள் 32-ஆம் நாள்

14—06—2000 புதன்கிழமை

வைகாசி விசாகம்

11-5

மயிலம் பொம்மபுர ஆதீன வெளியீடு எண்: 61

# ஸ்ரீ சிவஞான பாலைய சுவாமிகள் மும்மணிக்கோவை

## மூலமும் உரையும்

ஆசிரியர்:

காயாறு – ஞானசுந்தரையர்

உரையாசிரியர்:

பேராசிரியர் ஆ. சிவலிங்கனார்
மயிலம் – பொம்மபுர ஆதீனப்புலவர்

இந்நூல்
திருக்கயிலாய பரம்பரை மயிலம் பொம்மபுர ஆதீனம்
19-ஆம் பட்டம் குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் அவர்களின்
அருளாணையின் வண்ணம் வெளிவருகிறது.

பதிப்பாசிரியர்:

குமாரசிவ. இராசேந்திரன், பி.காம்., பி.எல்.,
திருமடம் – மயிலம், பொம்மையபாளையம்.

11-5



உ

ஸ்ரீ பாலசித்த குருவே போற்றி

ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருவடி வாழ்க

# குருமரபு வாழ்த்து

பரசிவமார் திருக்கயிலைப் பரம்பரையின்
வீரசைவ பரமே காட்டப்
பரனருளால் பொம்மபுரக் கடலுதித்த
சங்குகன்னப் பால சித்தர்
வரமயிலார் முருகனுப தேசமுடன்
வந்துகுரு வாகி யாண்ட
திரமிகுபேர் சிவஞான பாலயநற்
குருமரபு சிறந்து வாழி.



# நூல் குறிப்பு

| | | |
|---|---|---|
| 1. | தலைப்பு | : ஸ்ரீ சிவஞான பாலைய சுவாமிகள் மும்மணிக்கோவை மூலமும் உரையும் |
| 2. | ஆசிரியர் | : கரையாறு – ஞானசுந்தரையர் |
| 3. | உரையாசிரியர் | : பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் |
| 4. | பதிப்பாசிரியர் | : குமாரசிவ. இராசேந்திரன் |
| 5. | பதிப்பு | : திருமடத்தால் முதல் பதிப்பு-2000 |
| 6. | உரிமை மற்றும் வெளியீடு | : மயிலம், பொம்மபுர ஆதீனம் மயிலம் – 604 304<br>தொலைபேசி எண்:<br>மயிலம்: 04147 – 37223<br>பொம்மையபாளையம்: 0413–655188<br>பாண்டிச்சேரி: 0413–341880 |
| 7. | பொருள் | : சிற்றிலக்கியம் |
| 8. | தாள் | : சேஷ்சாயி 10.5 |
| 9. | அளவு | : கிரவுன் 1/8 |
| 10. | எழுத்து | : 10 & 12 புள்ளி |
| 11. | பக்கங்கள் | : 78 |
| 12. | விலை | : ரூ. 20-00 |
| 13. | படிகள் | : 1200 |
| 14. | அச்சிட்டோர் | : சபாநாயகம் பிரிண்டர்ஸ்<br>176, கீழரத வீதி<br>சிதம்பரம் – 608 001<br>தொலைபேசி எண்: 04144 - 23040 |

11-5





மயிலம் பொம்மபுர ஆதீனத் திருமடம்
மயிலத்தில் அமைந்துள்ள

## ஸ்ரீ வள்ளி தெய்வயானை உடனுறை
## ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி



திருக்கயிலாய பரம்பரை

மயிலம் பொம்மபுர ஆதீனம், குருமகாசந்நிதானம்

19 - ஆம் பட்டம்

ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள்

## உரையாளர் உரை

சிவஞான பாலைய சுவாமிகள் மும்மணிக்கோவை என்னும் இந்நூல் காஞ்சிபுரத்தையடுத்த காயாறு என்னும் ஊரினரான ஞானசுந்தரையர் என்பவரால் இயற்றப்பட்டது. மயிலம் – பொம்மபுர ஆதீனத்தில் பதினான்காம் பட்டமாக எழுந்தருளி அருளாட்சி செய்த சிவஞான பாலைய தேசிகர்மீது பாடப்பட்டது. அவர்கள் ஆட்சிக்காலம் திருவள்ளுவராண்டு 1848 - 1874. (கி.பி. 1817 - 1843)

இந்நூல் அறுபது ஆண்டுகளுக்கு முன்னர் அச்சேறியது அதிற் காணப்படும் முகப்புத்தாளில் நூலின் பெயர் சிவஞான சுவாமிகள் மும்மணிக்கோவை என்றிருந்தாலும் நூலின் பாடல் தொடக்கத்தில் ஸ்ரீ சிவஞான பாலைய சுவாமிகள் மும்மணிக்கோவை என்றிருப்பதால் இதுவே நூற்பெயராகக் கொள்ளப்பட்டது.

மயிலம் – பொம்மபுர ஆதீனத்துப் பத்தொன்பதாம் பட்டம் குருமகா சந்நிதானம் அவர்கள் ஆதீன நூல்களை உரையுடன் அச்சேற்றி வரும் வகையில் இந்நூலையும் உரையுடன் அச்சேற்றத் திருவுளம் கொண்டு அடியேனை உரை எழுதப் பணித்தார்கள். ஆணைவழி உரை வரையப்பட்டது.

காயாறு ஞானசுந்தரையர் வரலாறு அறியக்கூட வில்லை. இந்நூற்குச் சிறப்புப் பாயிரமாகவுள்ள தொழூர் வேலாயுத முதலியார் பாடலைக் கொண்டும் நூலின் பதினெட்டாம் பாடலைக் கொண்டும் ஞான சுந்தரையர் பதினான்காம் பட்டம் மகாசந்நிதானத்தைக் குருவாகக் கொண்டவர் என்பதும் சந்நிதானத்தால் உபதேசிக்கப் பெற்றவர் என்பதும் அறிய முடிகிறது. முதலியார் பாடலைக் கொண்டு சுந்தரையர் என்பார் உபதேசம் பெற்ற பின்னர்த் தீட்சா நாமமாக ஞானசுந்தரையர் ஆனார் என்பது உய்த்துணரப்படுகிறது.

இந்நூற்குக் காப்புச் செய்யுள் இல்லை. தம் குருவே தமக்குத் தெய்வம் ஆதலின் அவர்ப் பற்றிய நூலுக்குத்

தனியாகக் காப்புச் செய்யுள் வேண்டுவதில்லை என் எண்ணினர் போலும்.

சிவஞானியிடமாக மயிலம் ஒன்று மட்டுமே கூறப் பட்டுள்ளதால் இந்நூல் மயிலத்தில் இருந்தவாறு பாடப் பட்டதாகலாம்.

இந்நூலில் உள்ள முப்பது பாடல்களில் எளிதில் பொருள் உணர முடியாதனவும் உள. தத்துவச் சொற்கள் பலவுள. அதனால் என் சிற்றறிவிற்கெட்டியவாறு உரை வரைந்துள்ளேன். ஆங்காங்கு. வந்த ஐயங்களைத் தத்துவத் தலைக்காவலர் முனைவர் வை. இரத்தினசபாபதி, மகாவித்துவான் வே. சிவசுப்பிரமணியன், நூற்கடல் கோபாலையர், முனைவர் சு. திருநாவுக்கரசு, முனைவர் மா. சற்குணம், கி. சிவக்குமார், எம்.ஏ,. எம்.எட்., முதலிய அறிஞர் பெருமக்களிடம் கலந்து ஓரளவு தெளிவு பெற்று எழுதியுள்ளேன். அவ்வறிஞர் பெருமக்களுக்கு நன்றியேன்.

அடியேனை உரையாளனாகச் செய்துவரும் மகா சந்நிதானத்தின் திருவடிகளை வணங்குகின்றேன்.

வேண்டும் நூல்களைத் தந்துதவிய மயிலம் சிவஞானபாலைய சுவாமிகள் தமிழ்க்கல்லூரி முதல்வர்க்கும், நூலகர் கருணை. நக்கீரன், எம்.ஏ;பி.எல்.ஐ.எஸ். அவர் கட்கும் நன்றியுடையேன்.

வழக்கம் போல் எழுத்துகளைப் படியெடுத்துதவும் என் மருமகளார் விசயலட்சுமி முருகவேலனுக்கு வாழ்த்துகள்.

என் உரை நூல்களைப் பதிப்பித்து வரும் மேற்படி ஆதீனத்து மதிப்புக்குரிய குமாரசிவ. இராசேந்திரன் பி.காம்; பி.எல். அவர்கட்கு வணக்கமும் நன்றியும் உரிய.

என்னைப் படிக்க வைத்த திருக்கோவலூர் ஆதீனம் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் மடாலயத்தையும், படிப்பிக்க வைத்த மயிலம் பொம்மபுர ஆதீன மடாலயத்தையும் பணிகின்றேன்.

தாய்தண்டமிழ் நாட்டிற்பெருந் தக்கோர்பலர் முன்னே
போய்தங்குதற் கேற்றம்மிகப் போற்றப்பெறும் கல்வி
ஏய்தந்துநன் னெறிசேர்ந்திட என்னையருள் செய்த
தாய்தந்தையர் தாட்டாமரை தாழாதிறைஞ் சுவனே.

14—06—2000

ஆ. சிவலிங்கனார்
மயிலம்

உ

ஸ்ரீ பாலசித்த குருவே போற்றி

ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருவடி வாழ்க

# பதிப்புரை

மயிலம் பொம்மபுர ஆதீனம் ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் திருமடம் தொன்மையான வீரசைவ பெரிய மடமாகும். இவ்வாதீனத்தின் குருமுதல்வர் ஸ்ரீ பாலசித்தர் ஆவார். அவர்கட்குப் பின்னர் திருமடத்தின் ஆதீன கர்த்தர்களாக விளங்கியவர்கள் ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் என்னும் பெயரினைத் தாங்கி அருள் ஆட்சி செய்து வருகிறார்கள். தற்பொழுது பத்தொன்பதாம் பட்டம் குருமகா சந்நிதானம் அவர்கள் திருமடத்தின் ஆதீன கர்த்தராக அருளாட்சி செய்து வருகிறார்கள்.

19-ஆம் பட்டம் குருமகா சந்நிதானம் திருக்கோயில், திருமடம் திருப்பணிகளுடன் இலக்கியப் பணியாக நூல்களை அச்சு செய்து திருமடத்து விழா நாள்களில் வெளியீடு செய்து வருகிறார்கள்.

அந்நிலையில் ஸ்ரீ சிவஞான பாலைய சுவாமிகள் மும்மணிக்கோவை என்னும் இந்நூல் விக்கிரம ஆண்டு வைகாசித் திங்கள் 32-ஆம் நாள் புதன் கிழமை (14-06-2000) இரண்டாம் பட்டம் ஆதி சிவஞான பாலய சுவாமிகள் குருபூசை மலராகக் குருமகா சந்நிதானம் அவர்களின் அருளாணைப்படி வெளிவருகின்றது.

இந்நூல் முதலில் அச்சாகிய விவரம் வருமாறு:

உ

சிவமயம்

பொம்மையபாளையம் பெரியமடம்

ஸ்ரீ பாலைய சுவாமிகள் ஆதீனத்துப் பதினான்காம் பட்டம் பெற்ற இலிங்கப்பையரென்னும் பிள்ளைத் திருநாமங் கொண்ட மயிலாசலம்

**ஸ்ரீ சிவஞான சுவாமிகள் மும்மணிக்கோவை**

இஃது

**காயாறு - ஞானசுந்தரையரவர்களால்**

இயற்றப்பட்டு

தொழுவூர் வேலாயுத முதலியாரவர்களால்
பார்வையிடுவித்து

தஞ்சை மாநகரம் சதாவதானம்
சுப்பிரமணிய ஐயரவர்களது சென்னைபட்டணம்
வித்தியாவர்த்தனி அச்சுக் கூடத்தில் பதிப்பிக்கப்பட்டது
வெகுதானிய வருடம் தை மாதம் (1938-39)

மேற்படி குறிப்பின்படி இந்நூல் 1939 ஜனவரியில் வெளிவந்துள்ளது என்பதை அறிய முடிகிறது. இது வெளி வந்த காலத்தில் மயிலம் பொம்மபுர ஆதீனத்தின் ஆதீன கர்த்தராக 18-ஆம் பட்டம் குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் அருளாட்சி செய்து உள்ளார்கள்.

இந்நூலுக்கு மயிலம் பொம்மபுர ஆதீனப் புலவர் பேராசிரியர் ஆ. சிவலிங்கனார் அவர்கள் உரை எழுதியுள்ளார்கள். அவர்கட்கு ஆதீனத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். நூல் அச்சாகும் கால் மெய்ப்புத் தாள்களைத் திருத்திய அன்பர்களுக்கும், நூல் அச்சு செய்த சபாநாயகம் பிரிண்டர்ஸ் உரிமையாளர் ஆர். கௌதம சங்கர் அவர்கட்கும், அச்சகப் பணியாளர் களுக்கும், இந்நூல் வெளிவரப் பல்லாற்றானும் உதவிய அன்பர்கட்கும் ஆதீனத்தின் சார்பில் நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் பதிப்புப் பணியை வழக்கம்போல் எமக்கு அளித்த குருமகா சந்நிதானங்களின் திருப்பாத கமலங் களுக்கு எனது நன்றியினைக் காணிக்கையாக்குகின்றேன். இந்நூலைத் தமிழுலகு ஏற்றுப் போற்றும் என நம்புகிறேன்.

குருமகா சந்நிதானம் அவர்களின்
அருளாணையின் வண்ணம்
**குமாரசிவ. இராசேந்திரன்,**
பி.காம் , பி.எல்.,
திருமடம், மயிலம்
பொம்மையபாளையம்

பொம்மையபாளையம்
14—06—2000
விக்கிரம ஆண்டு
வைகாசித் திங்கள் 32-ஆம் நாள்
புதன்.

# மயிலம் - பொம்மபுர ஆதீன வரலாற்றுச் சுருக்கம்

சூரன், பதுமன் என்னும் இருவரின் ஒருடல் சூரபதுமன். முருகனோடு சூரபதுமன் போர் புரிந்தபோது, முருகன் வேலினால் பிளக்கப்பட்டு, சூரன் மயிலாகவும், பதுமன் கோழியாகவும் மாறினர். மயிலாக மாறிய சூரன் முருகனிடம் தன்னை வாகனமாகக் கொள்ள வேண்டினான். முருகப் பெருமான் ஆணைப்படி மயில் வடிவில் மலையாக இருந்து முருகனை நோக்கித் தவம் செய்தான். முருகன் வெளிப்பட்டு மயிலாகவுள்ள சூரனை வாகனமாகக் கொண்டார். அவனின் மயில் வடிவான உடல் மலையாகி மயிலம் எனப் பெயர் பெற்றது. அம்மலையுள்ள ஊர் மயிலம் எனப் பெயர் பெற்றது.

கயிலாயத்து, மேலைக் கோபுர வாயில் காவலரான சங்கு கன்னர் என்பார், சிவபிரான் ஆணைப்படி மானிட வடிவில் விபூதி, உருத்திராக்கம், மார்பில் இலிங்கம், சடைமுடி, காவியாடை கையில் மாத்திரைக்கோல் முதலியன விளங்கப் பால வயதினராய்ப் புதுச்சேரியை யடுத்த பொம்மயபாளையம் என்னும் ஊர்ப்பக்கமாகக் கடலில் மிதந்து வந்து கரையேறி, அங்கிருந்து பல சித்துகளைச் செய்தும் சிவஞானத்தைப் போதித்தும் சிவஞான பாலசித்தர் என்ற பெயருடன் விளங்கி வந்தார். அவர், நாரதர் மூலம் மயிலத்தின் பெருமையைக் கேள்விப் பட்டு, அங்கு சென்று முருகனை நோக்கிப் பன்னெடுங்காலம் தவம் இருந்தார்.

அவர் தவத்துக்கு இரங்கி முருகப் பெருமான் வெளிப் படாதிருப்பது கண்ட வள்ளி தெய்வயானையர், சித்தர்க்கு அருள்புரிய வேண்டினர். காலம் வரும்போது அருள்

புரிவோம் என்ற முருகப் பெருமானிடம், இருவரும் ஊடல் கொண்டு சித்த கன்னியர் வடிவில், தவத்தில் இருந்த சித்தரிடம் வந்து, தாம் சித்த கன்னியர் என்றும், தம்மை மக்களாகப் போற்றி வரவேண்டும் என்றும் வேண்டினர். சித்தரும் அவ்வாறே போற்றி வரும்போது ஒருநாள் முருகப் பெருமான், வேட்டுவ வடிவு கொண்டு சித்த கன்னியர் இருக்கும் குடில் பக்கம் சென்றார். அது கண்ட சித்தர் தடுக்க இருவர்க்கும் போர் நிகழ்ந்தது. பெருமான் வேலாயுதத்தை விடுவிக்க அதனைச் சித்த கன்னியர் தம் பக்கம் பிடித்துக் கொண்டனர். பின்னர் இருவரும் மற்போர் புரியப் பெருமான் திருவடி சித்தர் உடம்பிற் பட்டதால், சித்தர், வந்தவன் முருகப் பெருமான் என உணர்ந்து வழிபட்டுத் தம்மிடம் இருக்கும் வள்ளி தெய்வயானையரைப் பெருமானுக்கு மயில மலையில் திருமணம் செய்து கொடுத்தார். பெருமான் திருமணக் கோலத்துடன் அம்மலையில் அருள்புரிந்து வருகிறார்.

பாலசித்தர் ஒருகால் பொம்மயபாளையத்துக்கு அடுத்த பெருமுக்கல் என்னும் மலையிடத்திருந்தபோது, அம்மவை என்னும் வீரசைவ அம்மையார் தம் கணவருடன் போந்து சித்தர்க்குத் தொண்டு புரிந்து வந்தார். சித்தர்க்கு உணவாகக் கள்ளிச்செடிப் பாலைக் கறந்து கொடுத்து வந்தார். சித்தர், அப்பாலை உண்டு அதன் சேடத்தை அம்மையாரிடம் தர அவர் உண்டார். அதன் பயனாக அம்மவை கருவுற்று ஓர் ஆண்மகவைப் பெற்றார். பெற்ற மகனைச் சித்தர் விருப்பப்படி அவர்க்கே கொடுத்துத் தாம் போற்றி வளர்த்து வந்தார். சித்தர் வள்ளி தெய்வயானை யரைப் பெருமானுக்கு மணந்து கொடுத்த பின்னர்ப் பெருமானிடம், தம் பார்வையில் வளரும் பிள்ளைக்கு உபதேசம் செய்தருள வேண்டினார். பெருமானும் அப்பிள்ளைக்குத் திருநீறு உருத்திராக்கம் இட்டலிங்கம்

தரிப்பித்து ஐந்தெழுத்து மந்திரத்தை உபதேசித்துக் காவியாடை உடுத்தச் செய்து பாலை மட்டும் உணவாகக் கொள்ளச் செய்து, பால் உணவு கொள்வதால் பாலையர் என்றும், சிவஞான உபதேசம் பெற்றதால் சிவஞானி என்றும் பெயர் வழங்குக என்று கூறினார்; மறைந்தார். பின்னர்ச் சிலகாலம் சித்தர் மயிலத்திலிருந்து முருகப் பெருமானுக்கு வலப்பக்கத்திலிருக்கும் சிவலிங்கத்தில் ஐக்கியமானார்.

முருகப் பெருமானால் உபதேசம் பெற்றவர், பலர்க்கும் தாம் உபதேசம் செய்து வந்ததால் தேசிகர் என்று வழங்கப் பெற்று 'சிவஞான பாலய தேசிகர்' என யாவராலும் போற்றப்பட்டார்.

சிவஞான பாலய தேசிகர் காஞ்சிபுரத்தில் விஷம் தீண்டியிறந்தவனை உயிர்ப்பித்தார். காஞ்சிபுரம் பகுதியை யாண்ட நவாபுவின் மனைவியின் சூலை நோயை விபூதியால் போக்கினார். செய்யூர் சென்றபோது, அங்குள்ளவர் சிலர் கல்லும் மணலும் கலந்து வைத்த குடத்தைக் கொடுக்கச் சுவாமிகள் அதைச் சர்க்கரையுள்ள குடமாக்கினார். மதுரையில் தையற்காரன் மனைவியுடன் பிள்ளைப் பேறின்றி இருந்து வயது முதிர்ந்தவனை மீள இளமை பெறச் செய்து பிள்ளைப்பேறுண்டாகச் செய்தார். செஞ்சியையாண்ட திரியம்பக மகாராசனின் மகள் கூந்தல் நரையைப் போக்கிக் கருங்கூந்தலாக்கினார். தம்பால் பொறாமை கொண்ட மாந்தரீகன் சொற்படித் திரியம்பக மன்னன் தம்மையும் மாந்தரீகனையும் கடலில் விட்டபோது, தாம் கரையேறியதோடு, சுறாமீனால் விழுங்கப்பட்ட மாந்தரீகனையும் மீட்டருளினார்.

இப்படிப் பல சித்துகள் செய்து வைகாசி விசாகப் பௌர்ணமியில் பொம்மயபாளையத் திருமடத்தில் உள்ள ஒடுக்கத்தில் இருந்து தம் உடம்பைத் திருநீறாக்கி இலிங்கைக்கியம் ஆனார். அத்திருநீறு இன்றும் அத்திரு மடத்தின் ஒடுக்கத்தில் வைத்துப் பூசிக்கப்பட்டு வருகிறது. சிவஞான பாலய தேசிகர் மரபினர் இன்றும் மயிலத்தில் முருகப் பெருமானுக்குத் திருவிழாவெடுத்து நித்திய நைமித்திக வழிபாடாற்றி வருகின்றனர். இன்றுள்ள சுவாமிகள் பத்தொன்பதாம் பட்டம் சிவஞான பாலய தேசிகர் ஆவர்.

வாழ்க மயிலம் — பொம்மபுர ஆதீனம்.



உ

வேலுமயிலுந் துணை

சிவஞான பாலைய தேசிகன் திருவடி வாழ்க

## காயாறு ஞானசுந்தர அய்யர் இயற்றிய

# சிவஞான பாலைய சுவாமிகள் மும்மணிக்கோவை

## சிறப்புப் பாயிரம்

### தொழுவூர் வேலாயுத முதலியார் இயற்றியது

(எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

1. பாட்டுடைத் தலைவன் தனக்கும்பாட் டுரைத்த
பண்பற்கும் வேறிலை யிடையீ(டு)
ஈட்டுறும் அடையே முன்னவற் கும்பின்
இவற்குமே யவையிரு மணியாம்
பூட்டிடை மணியே யாப்பதா மாகப்
புகலுறு மும்மணிக் கோவை
நாட்டுபே ரொக்கு மேசிவ ஞானி
ஞானசுந் தரன்செயுள் நயப்பே.

**கருத்துரை:** சிவஞானியைப் பற்றி ஞானசுந்தரன் செய்த மும்மணிக்கோவை நூல் மிகப் பெருமையுடைய தாகும். பாட்டுடைத் தலைவனாகிய சிவஞான பாலய தேசிகர்க்கும் பாடிய ஆசிரியராகிய சுந்தரனுக்கும் ஞானம் எனும் அடைமொழியுண்டு. அவ்வடையிரண்டும் உடைய அவர் இருவரும் இரண்டுமணிகளாவர். அவ்விரண்டு மணிகளையும் சேர்த்து வைக்கும் மணி அந்நூலாகும். எனவே சிவஞான தேசிகரும் ஞானசுந்தரனும் நூலும் ஆகிய மும்மணிகளைத் தெரிவிக்கும் முறையில் நூலுக்கு மும்மணிக்கோவை எனும் பெயர் பொருந்தும் என்பது.

**பதவுரை:** பாட்டுடைத் தலைவன் தனக்கும் – பாட்டுடைத் தலைவராகிய சிவஞான பாலைய தேசிகர்க்கும், பாட்டு உரைத்த பண்பற்கும் – அப்பாட்டைச் செய்த நற்குணத்தராகிய ஞான சுந்தரையர்க்கும், இடையீடு வேறு இலை – இடைவெளி வேறு இல்லை, (இருவரும் குருசீடர் என்ற நெருக்கம் உடையவரே), ஈட்டு உறும் அடை – சேர்த்தல் உறும் ஞானம் எனும் அடைமொழிகள், முன் அவற்கும் பின் இவற்கும் ஏய – முதலில் பாட்டுடைத் தலைவர்க்கும் பின்னர்ப் பாடியவர்க்கும் பொருந்த வந்தனவாம். அவை இருமணியாம் – சிவஞானம் ஞானம் எனும் இரண்டும் இரண்டு மணிகளாகும்; (அதனால் அவற்றையுடைய இருவரும் இரண்டு மணிகளாவர்.) இடை பூட்டு மணி யாப்பது ஆக – இருவர்க்கும் இடையிருந்து சேர்க்கும் மணியாக நூல் அமைய, புகல் உறு – புகழப் படுதல் உற்ற, மும்மணிக்கோவை நாட்டுபேர் ஒக்கும் – மும்மணிக்கோவை என்று நிலை நிறுத்திய பெயர் மிகப் பொருந்தும் (அதனால்) சிவஞானி – சிவஞான பாலய தேசிகர்க்கு, ஞானசுந்தரன் – ஞானசுந்தரன் செய்த, செயுள் நயப்பு – நூலானது மிகப்பெருமையுடையதாகும் என்றவாறு.

**குறிப்புரை:** இடையீடு இலை என்றது குருசீடர் என்ற வகையில் ஒன்றியிருத்தலைக் குறித்தது. தலைவன் என்றது குருநிலையையும், பண்பன் என்றது நற்பண்புள்ள சீட நிலையையும் உணர்த்தும். இடையீடு வேறு இலை – இடை வெளியாகிய வேறுபாடு இல்லை. அடை என்றது சிவஞானம் ஞானம் என்பனவற்றை. நூலாசிரியர்க்கு ஞானம் என்பது அடை என்றதால் அவர் இயற்பெயர் சுந்தரன் என்பதாம். சிவஞான பாலய தேசிகர் தீட்சை செய்து தீட்சைப் பெயராக ஞானம் சேர்த்து ஞானசுந்தரன்

என்றார் எனக் கொள்க. சிவஞானி தீட்சை செய்தார் என்பதை நூலாசிரியர்,

போற்றுறும் பொன்னடிப் போதென்,
சிரத்துப்பொருந்த வைத்த
மாற்றறு நின்னருட் கென்னைகைம்
மாறு மயிலத்தனே (18)

என்று கூறியதால் அறியலாம். முருகப் பெருமான் சிவஞான பாலய தேசிகர்க்கு உபதேசம் செய்தபோது சிவஞானம் எனும் அடைமொழி தந்தது முன்னரும், பதினான்காம் பட்டம் சிவஞான பாலயதேசிகர் சுந்தரர்க்கு உபதேசம் செய்து ஞானம் எனும் அடைமொழி தந்தது பின்னரும் நடந்தமையின், முன்பின் என்பன கூறப்பட்டன. அவை – அடைமொழிகள்; சிவஞானம் ஞானம் என்பன. அவ்வடைமொழிகள் இருமணி என்றதால் அவற்றைக் கொண்ட இருவரையும் குறித்ததாகக் கொள்க. பூட்டுதலாவது பாட்டுடைத் தலைவனையும் பாடியவரையும் ஒன்று படுத்துதல். யாப்பதாம் என்பதில் ஆம் அசைநிலை. யாப்பு – செய்யுள்; அது நூலுக்கு ஆயிற்று. மும்மணிக் கோவை என்பது சிற்றிலக்கிய வகைகளுள் ஒன்று. ஏய அவை என்பது ஏயவை என அகரம் தொக்கது. நயப்பு ஆம் என முடிக்க. ஏகாரம் இடை வந்தன அசை; ஈற்றில் வந்தது ஈற்றசை.

தஞ்சைமா நகரம் சதாவதானம்
**சுப்பிரமணிய ஐயரவர்கள் இயற்றியது**
(அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்)

2. **திருமணக்கும் மலர்மணக்கப் புனல்முகக்கும்**
**குடமணக்கும் செழுந்த டஞ்சூழ்**
**தருமணக்க உடுமணக்கும் காயாற்று**
**ஞானசுந்த்ர தனதன் முப்பா**
**மருமணக்கும் மணிக்கோவை கேட்பவர்கற்**
**பவர்செவிநா மணக்க மற்றோர்**
**கருமணக்கும் வினையொழித்த சிவஞானி**
**புயமணக்கக் கவின்செய் தானே.**

**கருத்துரை:** *காயாறு ஞானசுந்தரன் என்பவர், சிவஞான பாலய தேசிகரின் புயங்களில் மாலையாகச் சேரச் சிவஞான பாலைய சுவாமிகள் மும்மணிக்கோவை எனும் நூலை அழகுறச் செய்தார் என்பது.*

**பதவுரை:** *திருமணக்கும் மலர்மணக்க-இலக்குமி தங்கும் தாமரை மலர்கள் நிறைந்திருக்கவும், புனல் முகக்கும் குடம் மணக்கும் - நீர் முகக்கும் குடங்கள் நிறையும் படியாகவும் உள்ள, செழும் தடம் சூழ் - வளமான குளங்கள் சூழ்ந்துள்ள, தருமணக்க உடுமணக்கும் - மரங்கள் மிக்குள்ளதால் நட்சத்திரங்கள் கலந்து கிடக்கக்கூடிய, காயாறு - காயாறு எனும் ஊரில் வந்த, ஞானசுந்த்ரதனதன் - ஞானசுந்தரன் எனும் செல்வன், முப்பா மருமணக்கும் மணிக்கோவை - ஆசிரியம் வெண்பா கட்டளைக் கலித்துறை என்னும் மூன்று பாக்கள் பொருந்துகின்ற மும்மணிக்கோவை என்னும் நூலை, கேட்பவர் செவி - கேட்பவர் காதும், கற்பவர் நா-படிப்பவர் நாவும், மணக்க-*

இனிதாகப் பொருந்த, கருமணக்கும் வினை ஒழித்த – அன்பர்க்குக் கருவுடன் கூடிவரும் வினையைப் போக்கிய, சிவஞானி புயம் மணக்க – சிவஞான பாலய தேசிகரின் புயங்களில் சேருமாறு, கவின் செய்தான் – அழகுபெறப் பாடினார் என்றவாறு.

**குறிப்புரை:** திருமணக்கும் மலர் – திருமகள் தங்கும் மலர்; தாமரை. ஊரார் நீர் முகந்து செல்லுதலின் குடம் மணக்கும் தடம் ஆயிற்று. மரங்கள், அடர்ந்து மேலோங்கி நட்சத்திர மண்டலம் வரையிருப்பதால், நட்சத்திரங்கள் தருக்களில் மணந்தன என்றபடி. காயாறு காஞ்சீபுரம் பக்கத்ததோர் ஊர். தனதன் – குபேரன்; புலமைச் செல்வ முடையவன் என்னும் பொருளது. மருமணக்கும் – மருவுதல் பொருந்தும். மரு முதனிலைத்தொழிற்பெயர். 'முப்பா மணி மருமணக்கும் கோவை' என மாறி மும்மணிக் கோவை என்க. ஆசிரியம் வெண்பா கட்டளைக் கலித்துறை என்னும் முப்பாக்கள் மணி எனப்பட்டன. கோவை – மாலை; முப்பாக்களும் ஒன்றன்பின் ஒன்றாக மாறி மாறி அடுக்கப் படுதலின் மும்மணிக்கோவையாயிற்று. 'கேட்பவர் கற்பவர் செவிநா' என்றது நிரல்நிறையணி. கருமணக்கும் வினை – கருவொடு கலந்துவரும் வினை. மணக்கும் என்பது பல்கால் வந்துள்ள சொற்பொருட் பின்வரு நிலையணியிப்பாடல். ஏகாரம் ஈற்றசை.

# காயாறு ஞானசுந்தரையர் இயற்றிய
# ஸ்ரீ சிவஞான பாலைய சுவாமிகள்
# மும்மணிக்கோவை

## நூல்

*(நிலைமண்டில ஆசிரியப்பா)*

1. பூமிசைப் புலவனும் புயல்வணத் தலைவனும்
தாம்உணர் வரிய தனிமுதல், அணுமுதல்
அனைத்தையும் அங்கத் தமைத்த வங்கியின்
முனைப்பட நின்று மூடரேம் உணர்தராது
அஞ்சுறு துயர்ப்பவத் தலம்வரல் நோக்கித்
தஞ்சம் ஆகியதான் தனதுஓர் இச்சையில்
கிரியையாயச் சுருக்கிக் கிளர்ஞான சத்தி
சரமது மேனியாய்த் தன்னியல் தாமே
இனிதுணர வெளிதுற எழிற்சிவ ஞானி
ஈனனெளி[illegible]ந்த எந்தையெம் பெருமான்
திரு[illegible]ட் கழல் இணைச் செல்வச் சந்நிதி
மருவுறக் கிடைத்ததிவ் வாலிதாம் பிறப்பே.

**கருத்துரை:** *தூயதான எம் இம்மனிதப் பிறப்பு சிவஞான பாலய தேசிகன் திருவடிகளை யடைந்து வணங்குதற்குக் கிடைத்தது யாம் செய்த புண்ணியமாகும் என்பது.*

**பதவுரை:** *பூமிசைப் புலவனும் – தாமரைப் பூமேல் தங்கியுள்ள தேவனாகிய பிரமனும், புயல் வணத் தலைவனும் – மேக நிறத் தலைவனாகிய திருமாலும், தாம் உணர்வரிய தனிமுதல் – தாங்கள் உணர்தற்கியலாத ஒப்பற்ற முதல்வனும், அணுமுதல் அனைத்தையும் – நுண்*

உடம்பு முதலிய யாவற்றையும், அங்கத்து அமைத்த அங்கியின் – உடம்பில் சேர்க்கப்பட்ட உயிரின், முனைப்பு அட நின்று – ஆணவம் தாக்க இருந்து, மூடரேம் – அறிவற்றவராகிய யாங்கள், உணர்தராது – யாதும் உணராமல், அஞ்சுறு துயர்ப்பவத்து – அஞ்சத்தக்க துன்பப் பிறவியில், அலம்வரல் நோக்கி – சுழன்று கொண்டிருப்பதைப் பார்த்து, தஞ்சம் ஆகிய தான் – யாவற்றுக்கும் அடைக்கலமாக உள்ளதானே, தனது ஓர் இச்சையில் – தன்னுடைய ஒப்பற்ற இச்சாசத்தியால், கிரியையைச் சுருக்கி – கிரியா சத்தியைக் குறைத்து, கிளர் ஞானசத்தி தரமது – விளங்கும் ஞான சத்தி மேம்பாட்டை, மேனியாய் – மேனியாகக் கொண்டு, தன் இயல் – தன் இயல்பை, தாமே இனிது உணர்வு எளிதுஉற – தாமே இனிதாக உணர்தல் எளிவரும்படி, எழில் சிவஞானி என– எழுச்சியுறும் சிவஞானி என்று, வெளிவந்த எந்தை எம்பெருமான் – இவ்வுலகில் வெளிப்பட்டு வந்த எந்தையு மாகிய எம் சிவபிரானது, திருவருள் கழல் இணை – திருவருள் மயமான இரண்டு திருவடிகளின், செல்வச் சந்நிதி – சிறந்த திருமுன்னர், மருவுற – சென்று வணங்க, இவ்வாலிதாம் பிறப்பு – இந்த தூயதாய மனிதப் பிறவி, கிடைத்தது – கிடைக்கப் பெற்றது, எம் புண்ணியச் சிறப்பேயாம் என்றவாறு.

**குறிப்புரை:** மூன்று நிற மணிகளை நிரல்படக் கோத்த மாலைபோலத் தேவருள் ஒருவரையோ மக்களுள் சிறந்தார் ஒருவரையோ பாட்டுடைத் தலைவராகக் கொண்டு, வெண்பா ஆசிரியம் கட்டளைக் கலித்துறை என்னும் பாடல்களால் நிரலாக அந்தாதித் தொடையில் பாடப்படுவது மும்மணிக்கோவை எனப்படும் இந்நூல் சிவஞான பாலைய சுவாமிகளைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு பாடப்பட்டதாதலின் சிவஞான பாலைய சுவாமிகள் மும்மணிக்கோவை எனப்பட்டது

வண்ணன் என்பது இடைக் குறையாய் வணன் என வந்தது. தனிமுதல், அலம்வரல் நோக்கித் தான் ஞான சத்தி தரமது மேனியாய் எளிதுற சிவஞானி என வந்த எந்தை என் முடிபு கொள்க. அணு – நுண் உடல். அங்கி அங்கத்தை உடையது; அது உயிர். அங்கமானது நுண் உடம்பாகிய சூக்கும உடம்பும் பருவுடம்புக்குரிய தோல் எலும்பு இரத்தம் இறைச்சி மேதை மச்சை சுவேதநீர் எனும் தாதுக்களும் அடங்கியது. அமைத்த என்பது அமைக்கப்பட்ட எனும் செயப்பாட்டு வினையில் வந்தது. உயிர் சிற்றறிவுடையது. அது உடம்பின் அமைப்புக்கேற்ப ஆணவத்தால் முரண்பட்ட அறிவுபெறும். மூடரேம் என்றது உயிரைத் தனியாக நிறுத்திக் கூறியது.

சிவபிரான் உயிர்கள் பிறவித் துயர்ப்படுவது கண்டு போக்க வேண்டித் தனக்குரிய இச்சை காரணமாகச், சிவம் என்பதற்குரிய செயல்களைக் குறைத்துக் கொண்டு, ஞானசத்தியே மனித உடம்பாக அமையத் தன் இயல்பைத் தானே எளிதாக உணருமாறு சிவஞானி என்ற பெயருடன் எளிமையாக வந்தார் என்பது.

சிவபிரான் சிவஞானியென மனித வடிவில் வந்தமையின் தன் இச்சை கிரியை ஞானம் எனும் மூன்று சத்திகளையும் கூறவேண்டி, இச்சையால் கிரியையைச் சுருக்கி ஞானசத்தி தரமது மேனியாய் வந்தார் என்பது கூறப்பட்டது.

தன் இயல்தானே உணர்தல் கூற வந்தவர் குரு வடிவம் கருதித் தாமே எனப் பன்மையாற் கூறினார்.

திருவருட்கழல் – திருவருளைச் செய்யும் கழல் எனினும் ஆம். கழல் திருவடிக்குத் தானியாகு பெயர். சந்நிதி – முன்னிடம். கழலிணைச்சந்நிதி மருவுதலாவது திருவடி முன்னர்ச் சென்று வணங்குதல். வாலிது – தூய்மையானது.

கிடைத்தது என்பதன் பின்னர், 'எம் புண்ணியச் சிறப்பு' என வருவிக்க; இது இசையெச்சம். ஏகாரம் ஈற்றசை.

### வெண்பா

2. பிறந்த பயன்கொள்வார் பேருலகிற் காணீர்
அறந்தழைக்கும் அந்தணனாய் வந்த–திறந் தெரிந்(து)
எங்கள் சிவஞானி எம்மான் கமலப்பூத்
தங்கள் முடியணிந்தார் தாம்.

**கருத்துரை:** பிறந்ததனாற் பெறும் பயன் கொள்வார் யார் எனின், சிவஞானியின் சேவடிக் கமலப் பூக்களைத் தம் முடிக்கணிந்தவரே யாவர் என்பது.

**பதவுரை:** எங்கள் சிவஞானி எம்மான் – எங்கள் சிவஞானியாகிய எம்பெருமானானவர், பேர் உலகில் – இப் பெரிய பூவுலகிலே, அறம் தழைக்கும் அந்தணனாய் வந்த திறம் தெரிந்து – அறங்கள் மிகுதற்காக அந்தணனாகி வந்தவதரித்த உண்மை நிலையை அறிந்து, கமலப்பூ – அவரது திருவடித் தாமரை மலரை, தங்கள் முடி அணிந்தார் தாம் – தங்கள் முடிக்கண் சூடியவர்களே, பிறந்த பயன் கொள்வர் காணீர் – இப்பூவுலகில் பிறந்ததன் பயன் பெறுவார்கள்; இதை நன்கு அறிவீராக என்றவாறு.

**குறிப்புரை:** பிறந்த பயன் – பிறந்ததனால் வரும் பயன்; காரணப் பொருட்டு வந்த பெயரெச்சத் தொடர். காணீர் என்பதற்கு உலகீராகிய நீவிர் என எழுவாய் கொள்க. தழைக்கும் என்பது தழைத்தற்காக என்னும் பொருளது. அறம் தழைக்கும் அந்தணனாய் வந்தமையை முதற் பாடலிற் காண்க. கமலப்பூ உவமையாகு பெயராய்த் திருவடியை உணர்த்திற்று. தாம் பிரிநிலை ஏகாரப் பொருளது; முடிக்கணிந்தவரே என்பது பொருள்.

## கட்டளைக் கலித்துறை

3. தாமா வுணரும் தரம்இலர் போலும் தரணிமிசைக்
கோமான் குருகுல ராயன் குணக்கடல் கோளகற்றும்
சீமான் மயூர கிரிவாணன் எம்சிவ ஞானியன்பர்
பூமாண் கழற்பொடி பூணறி யாத புலவர்களே.

**கருத்துரை:** *சிவஞானியின் அன்பரது திருவடித் திருநீற்றைப் பூசுதல் அறியாத புலவர்களே, தாமாக எதையும் உணரும் தகுதியற்றவராவர் என்பது.*

**பதவுரை:** *தரணிமிசைக் கோமான் - பூமியில் உள்ளவர்க்குத் தலைவரும், குருகுலராயன் - குருமார் கூட்டத்து அரசரும், குணக்கடல் - குணக்கடலாக விளங்குபவரும், கோள் அகற்றும் சீமான் - கோள்களின் தீய செயல்களைப் போக்கும் சீமானும், மயூரகிரிவாணன் - மயிலாசலத்து வாழ்பவரும் ஆகிய, எம்சிவஞானி - எம் சிவஞானபாலய தேசிகரின், அன்பர் பூமாண் கழல்பொடி - அன்பர்களின் பொலிவமைந்த சிறந்த திருவடித் திருநீற்றை, பூண் அறியாத - பூணுதலை அறியாத, புலவர்களே - புலவர்களே, தாமா உணரும் தரம் இலர் - தாமே அறியும் அறிவு இல்லாதவராவர் என்றவாறு.*

**குறிப்புரை:** *புலவர் - அறிவுடையவர். புலவராயினும் சிவஞானி அன்பர் கழற்பொடி பூணுதலை அறியாமையின் தாமே எதையும் அறியாதவராவர்; பிறர் அறிவிக்கவே அறிவர் என்றபடி. பூணுதலாவது பூசிக் கொள்ளுதல். பூண் முதல் நிலைத் தொழிற்பெயர்.*

இளைக்கும் மிடியற் குறுபொருளாம்
இறைவற் கரசாம் கூற்றுவனை
விளிக்கும் பிணிக்கு மருந்தாகும்
விடத்திற் கருஞ்சீர்க் கலுழனாம்
வளைக்கும் பகைக்குப் பகையாகும்
மலடர்க் கரிய மகவாகும்
திளைக்கும் கருணைச் சிவஞான
தேவன் திருக்கைத் திருநீறே

எனச் சிவஞானியின் திருக்கைத் திருநீற்றின் செயல் போல அவர் அன்பரின் திருவடித் திருநீறே யாவும் அறிவிக்கும் என்க. அன்பர்–சங்கமர். சங்கமர் திருவடிகளை அபிஷேகம் செய்து சாத்தும் திருநீறு அணிதலின் சிறப்புக் கூறியவாறு.

இனி எதுகை நோக்கி 'அன்பர் பூமான்' எனக்கொண்டு அன்பர்க்கு அரசன் எனச் சிவஞானியையே குறிக்கும் என்று, அவர் திருவடித் திருநீறணிதல் அறியாத புலவர் எனினும் ஆம். அப்புலவரைப் புன்புலவர் என்றார் சிவப்பிரகாசர், தமது சிவஞான பாலய தேசிகர் நெஞ்சுவிடு தூதில். தரம் என்றது அறிவைக் குறித்தது. போலும் என்பது அசைநிலை. கோள் அகற்றுதலாவது கோள்களின் இயக்கத்தால் அவ்வப்போது வரும் தீங்கினைப் போக்குதல். சீமான் – தலைவன். மயூரகிரி – மயிலமலை. ஏகாரம் ஈற்றசை. புலவர்களே எனக் கனிச்சீர் வந்துள்ளது.

### நிலைமண்டில ஆசிரியப்பா

4. புலவர்க ளாயினும் புரவல ராயினும்
மலர்தலை யுலகின் மற்றெவ ராயினும்
அலமரு துயர்க்கடற் காம்புணை தேரின்
கலவமார் மயூர கனவரை ஆதரித்(த)

ஒருபா லயத்தரு திருவடி சிக்கெனக்
கொள்ளில ராகில் கள்ள வெவ்வினைக்
கரும்சேற் றாசைப் பெருஞ்சுழல் அழுத்த
உய்கில ராகி நைவர்என் பதற்குக்
காட்சி காட்டும் சூழ்ச்சிமங் குறுக்கே.

**கருத்துரை:** *யாவராயினும் துன்பக் கடலுக்குப் புணையாகச் சிவஞானியின் திருவடிகளைச் சிக்கெனப் பிடிக்கவில்லை யென்றால், கொடிய வினையாகிய சேற்றில் ஆசை எனும் சுழல் ஆழ்த்தத் துன்புறுவர் என்பதை அச்சிவ ஞானியின் தோற்றமே அறிவிக்கும்; ஆதலின் ஆராய்ச்சியைக் கைவிடுக என்பது.*

**பதவுரை:** *புலவர்கள் ஆயினும் - புலவர்கள் ஆனாலும், புரவலர் ஆயினும் - புரவலர் ஆனாலும், மலர்தலை உலகில் மற்று எவராயினும் - அகன்ற இடமுடைய இவ்வுலகத்தில் உள்ள யாவராயினும், அலமரு துயர் கடற்கு ஆம்புணை தேரின் - சுழலவரும் துன்பமாகிய கடலைக் கடப்பதற்கு ஆகும் தெப்பத்தை ஆராயின், கலவம் ஆர் மயூரகனவரை ஆதரித்த - தோகை பொருந்திய பெரிய மயிலமலையை விரும்பி எழுந்தருளியுள்ள, ஒரு பாலயத்தரு- ஒப்பற்ற சிவஞான பாலய தேசிகராகிய தருவினது, திருவடி- திருவடியை, சிக்கெனக் கொள்ளிலர் ஆகில் - நன்றாகப் பிடித்திலர் என்றால், கள்ள வெவ்வினை கருஞ்சேற்று - கள்ளத் தன்மையுடைய கொடிய வினை என்ற கரிய சேற்றில், ஆசை பெரும் சுழல் அழுத்த - ஆசையாகிய பெரிய சுழலானது அழுத்த, உய்கிலர் ஆகி நைவர்- பிழையாதவராகித் துன்புறுவர், என்பதற்கு - என்பதற்கு, காட்சி காட்டும்- அவரது தோற்றப் பொலிவே தெரிவிக்கும், சூழ்ச்சிமம் குறுக்கு - அதனால் அறிவாராய்ச்சியை விடுவீராக என்றவாறு.*

**குறிப்புரை:** ஆதரித்த என்பதன் அகரம் தொக்கது. பாலயத்தரு—சிவஞான பாலயராகிய கற்பகத்தரு. கற்பகத்தரு கேட்டது அளிக்கும். சிவஞானியின் தோற்றமே கேட்டது அளிக்கும். பொலிவுடையது என்றபடி. சூழ்ச்சி – ஆராய்ச்சி. துயர்க்கடற்குச் சிவஞானியின் திருவடியே புணையாகும் என்பதனைக் கருதல் அளவை கொண்டு ஆராய வேண்டுவதில்லை; அவரது தோற்றமே அறிவிக்கும் என்றபடி. வினையானது ஒருவனை அவன்வழி நடக்கவொட்டாமல் தன்வழி நடக்கச்செய்தலின் கள்ள வெவ்வினை எனப் பட்டது. வினையாகிய சேற்றில் ஆசை என்ற சுழல் ஆழ்த்தும். ஆசை வேண்டாதவற்றில் செல்லும் விருப்பம். கலவமார் என்பது வாளா அடை மொழியாய் நின்றது.

### வெண்பா

5. குறுக்கக் குறுகும் பெருக்கப் பெருகும்
திறத்தவே லாவெழுத்துந் தேரின் – சிறப்புடைய
ஆதி எழுத்தொழிய ஆங்கன்றோ நீநான்இங்(கு)
ஏதில்சிவ ஞானி இனிது.

**கருத்துரை:** சிவஞானியே! சிவாய நம எனும் மந்திர எழுத்தில் முதல் எழுத்தாகிய சி என்பதில்தான் நீயாகிய நான் அடங்கியுள்ளேன் என்பது.

**பதவுரை:** ஏது இல் – அன்பர்கள் துன்பத்தை இல்லையாகச் செய்கின்ற, சிவஞானி – சிவஞானியே! இங்கு இங்கே, குறுக்கக் குறுகும் – குறுக்கக் குறுகுதலும், பெருக்கப் பெருகும் – பெருக்கப் பெருகுதலும் ஆகிய, திறத்த ஏலா – தன்மைகளை மனதில் ஏற்று, எழுத்தும் இனிது தேரின் – சிவாயநம எனும் ஐந்தெழுத்தையும் நன்கு ஆராயின், சிறப்புடைய ஆதி எழுத்தொழிய – சிறப்புடையதான சி எனும் முதல் எழுத்துத் தனித்து நிற்க, ஆங்கு அன்றோ நீ

நான் – அதில் அன்றோ நீயாகிய யான் இருப்பது? என்றவாறு.

**குறிப்புரை:** சிவாயநம எனும் மந்திரமாகிய ஐந்தெழுத்தும் சிவாய, சிவா, சி எனக் குறுக்கப்படுவதும் சி, சிவா, சிவாய, சிவாயநம எனப் பெருக்கப்படுவதும் ஆகிய தன்மையுடையதாகும். சி – சிவம்; வ – சத்தி, ய – உயிர், ந – திரோதம், ம – மலம் எனத் தனித்தனி அவ்வெழுத்துகளுக்குப் பொருள் உண்டு. சிவத்திலிருந்து சத்தியும் சத்தியால் உயிரும் வெளிப்பட, உயிர்க்கு மறைப்பு நிலையும் ஆணவ மலமும் சேர அமையும் என்பது மந்திர விளக்கம். சிவமாகிய 'சி' எனும் எழுத்தே யாவற்றையும் தன்னுள் அடக்கி வெளிப்படுத்த, அதில் உயிரும் அடங்கியிருத்தலின் 'சி' எனும் எழுத்திலேயே உயிராகிய தாம் இருப்பதாகக் கூறப்பட்டது. 'அது நீ ஆகிறாய்' எனும் 'தத்துவமசி' எனும் வாக்கியமும். நான் பிரமம் ஆகிறேன் எனும் 'அகம் பிரம்மாஸ்மி' எனும் வாக்கியமும் 'சி' என்பதிலேயே அடங்கும் என்க. சிவமே சிவஞானியாதலின் நீ நான் என்றபடி.

குறுகுதல் குறுகு எனவும் பெருகுதல் பெருகு எனவும் முதல்நிலைத் தொழிற்பெயராய் நின்று உம்மை சேர்ந்து குறுகும் பெருகும் என வந்தன. திறத்த – திறத்தன. முற்று வினையாலணையும் பெயர். ஏலா செய்யா எனும் வாய்பாட்டு வினையெச்சம். இங்கு இனிது தேரின் எனக் கூட்டுக. ஆதி எழுத்துக்குச் சிறப்பாவது மற்றை எழுத்துகள் தோன்றுதற்கு இடமாக இருத்தல்.

இனி 'சிவாயநம' என்பதுபோலக் குறுக்கக் குறுகுதலும் பெருக்கப் பெருகுதலும் ஏலாத 'சிவஞானி' எனும் எழுத்தைத் தேரின் அதில் உள்ள ஆதி எழுத்தாகிய 'சி' என்பதிலேயே 'நீயாக நான் உள்ளேன்' எனினும் ஆம்.

இதற்கு ஏலா எழுத்து எனப் பெயரெச்சத் தொடர் கொள்க.

இப்பாடலின் ஈற்றடி வெண்பாச்சிதைவாக அமைந்தது.

இப்பாடற்குத் தத்துவத் தலைக்காவலர் வை. இரத்தினசபாபதி அவர்கள் பின்வருமாறு விளக்கம் அளிப்பர்:

"குறுக்கக் குறுகும் பெருக்கப் பெருகும்
திறத்தவே எல்லா எழுத்தும் – சிறப்புடைய
ஆதி எழுத்தொழிய வாங்கன்றோ நீநானிங்
கேதில் சிவஞானி இன்று

எனப் பாடம் கொள்வர்.

குறுக்கினால் – குறுக்கி ஒலித்தால் குறுகியும், நீட்டினால் நீண்டும் ஒலிக்கும் தன்மையுடையனவே எல்லா எழுத்துகளும். சிறப்புடைய முதல் எழுத்தாகிய "அ" என்பது இறைவனையும் 'ஆ' எனில் ஆன்மாக் களாகிய பசுக்களையும் குறிக்கும். அவையிரண்டும் தவிர, ஆங்கு அதுமட்டுமா 'சி' என்ற எழுத்து உன்னை (சிவஞானியை)க் குறிக்கும். நீட்டினால் சீவனாகிய என்னைக் குறிக்கும். நீநான் இங்கு குற்றமற்ற சிவஞானியே எனக் கொள்ளலாம். இன்று என்பதை அசைநிலையாக்கிக் கொள்ளலாம். ஆங்கன்றோ என்பதை ஆங்கு ஒன்றோ எனவும் அமைக்கலாம்.

### கட்டளைக் கலித்துறை

6. இனியார் எமக்கெவர் இவ்விடை
எவ்விடை யாரெனினும்
தனியாக நாடுநர் தம்பயன்
அன்றித் தழங்கருவித்

தொனியாரு மஞ்ஞைத் தொழுவரை
யாளி துறவியைந்த
முனியாகி வந்தில னேல்ஆசை
யாகு முரட்சுரத்தே.

**கருத்துரை:** சிவஞானியானவர் எனது ஆசை எனும் பெரிய காட்டில் தாம் ஒரு துறவுக்கோல முனிவராகி வந்திலர் என்றால் இவ்விடத்தில் எமக்கு எவர் இனிய துணையாவார்? என்பது.

**பதவுரை:** எவ்விடையார் எனினும் - எவ்விடத்தில் இருப்பவராயினும், தனியாக - தனியாக யோக நிலையில் இருந்து, நாடுநர் பயன் அன்றி - நினைப்பவர்க்குப் பயனாக விளங்கும் பொருளாக மாத்திரம் அல்லாமல், தழங்கு அருவித்தொனி - விளங்கும் அருவியின் ஒலியானது, ஆரும் - ஒலிக்கின்ற, தொழு மஞ்ஞை வரை ஆளி - தொழத்தக்க மயிலமலை ஆள்பவராயும் உள்ள சிவஞானி, ஆசையாகும் முரண் சுரத்தே - எனது ஆசை என்ற பெரிய காட்டில், துறவு இயைந்த முனியாகி வந்திலனேல் - துறவுக்கோலம் பொருந்திய முனிவராகி வரவில்லை என்றால், இவ்விடை இவ்வுலகில், எமக்கு எவர் இனியார் - எங்களுக்கு எவர் இனிய துணையாவர்? ஒருவரும் இலர் என்றவாறு.

**குறிப்புரை:** இவ்விடை - இவ்வுலகம், எவ்விடையார் - எந்த ஊரார். தனியாக நாடுதல் - தனித்து யோக நிலையில் இருந்து நினைத்தல். பயன் - பயனாகிய பொருள். பயன் அன்றி மஞ்ஞை வரையாளியாகவும் இருக்கும் சிவஞானி என்க. தொழு மஞ்ஞை வரை என மாறுக. துறவு - துறவுக் கோலம். ஆசையைப் பெருங் காடாகக் கூறியபடி. ஆசைவேண்டாத ஒன்று. வீட்டுலக ஆசையையும் வெறுப்பவரை வீடும் வேண்டா விறலினர் என்பர் சேக்கிழார். இங்கே வேண்டாத ஆசையில் சிவஞானி

வந்ததால் அவ்வாசை உலகியல்புக்கு மாறுபட்ட ஆசையாக முரண்சுரம் எனப்பட்டது எனக் கொண்டு முரண் என்பதற்கு மாறுபாடு எனக் கொள்ளலும் ஆம்.

## நிலைமண்டில ஆசிரியப்பா

7. சுரத்திடைக் களவழித் தோன்றலொடு செல்வுழிச்
சரத்தனி விற்கொடு தமர்வரக் கண்ட
காதலி நெஞ்செனக் கருணை நாயக!
சீதமார் மயூரச் செழுங்கிரி வாண!
அவஞானம் அறுத்த சிவஞானச் செல்வ!
உலகியற் சிற்றூர் அதனைச் சிற்றுணர்(வு)
இலகிடும் உடுக்கள் நிலவுஅஞ் ஞானக்
கனையிரு ளிடையில் தமராங் கருவி
தாம்உண ராவகைச் சரணர் செம்மொழி
ஏமுறு பாங்கி யினிதுன் அருட்குப்
பாங்குறக் கூட்டப் பரிந்தருட் சித்தி
வீங்கிய வலித்து விழுச்சுக நகர்ப்புகத்
திருவடிச் சிறுதொழும்பு எனும்சுரத் துற்றுழி
வாதனைக் கொடுமரம் போதப் படுகணை
ஏந்திய தத்துவச் சுற்றம் வாய்ந்ததால்
அஞ்சினன்; கிழவ! நெஞ்சு உலர்ந்து இனைந்தே.

**கருத்துரை:** சிவஞான பாலைய தேசிக! ஒரு தலைவி, தன்பாங்கியானவள் தன்னைத் தலைவனுடன் சேர்க்க, அவனுடன் யாரும் அறியாமல் ஊரைவிட்டு இருளில் சுரத்திடைச் சென்றபோது, தலைவியின் சுற்றத்தார் தேடி, வில் அம்புகளுடன் அங்கு வந்தபோது தலைவியின் மனம் என்ன பாடுபடுமோ அப்படி யான் அஞ்சினேன் என்பது (விளக்கம் குறிப்புரையிற் காண்க).

**பதவுரை:** கருணை நாயக – கருணை புரிவதற்கு நாயகமாக விளங்குபவரே!, சீதம் ஆர் செழும் மயூரகிரி வாண – குளிர்ச்சி பொருந்திய வளமான மயில மலையில் வாழ்பவரே!, அவஞானம் அறுத்த சிவஞானச் செல்வ – அஞ்ஞானத்தைப் போக்கிய சிவஞான பாலையச் செல்வரே!, கிழவ – எனக்குரியவரே!, சுரத்திடை – பாலைவனத்தில், களவழித் தோன்றலொடு – களவொழுக்கத் தலைவனுடன், செல்வுழி – செல்லும்போது, சரத்தனிவில்கொடு – அம்புபூட்டப்பட்ட கொடிய வில்லோடு, தமர் வரக்கண்ட காதலி நெஞ்சு என – தந்தை உடன் பிறந்தார் முதலிய சுற்றத்தார் வரப் பார்த்த காதலியின் மனம் துன்புறுவதுபோல, உலகியல் சிற்றூர் அதனை – உலகியல் வாழ்வு எனும் சிற்றூரை, சிறு உணர்வு இலகிடும் உடுக்கள் நிலவும் – சிற்றுணர்வுகள் என்னும் சிறிய ஒளிவிடுகின்ற நட்சத்திரங்கள் விளங்குகின்ற, அஞ்ஞானக் கனை இடை இருளில் – அஞ்ஞானம் எனும் மிக்க நடு இருளிலே, தமராம் கருவி தாம் உணராவகை – எனக்குச் சுற்றமாக அமைந்த மனம் முதலிய அந்தக்கரணங்கள் அறியாதபடி, சரணர் செம்மொழி ஏம் உறு பாங்கி – சிவ சரணரின் உபதேச மொழியாகிய இன்பத்தைச் சேர்க்கும் பாங்கியானவள், இனிது உன் அருட்கு பாங்கு உறக் கூட்ட – இனிதாக நும் திருவருட்குப் பக்குவமாகச் சேர்க்க, பரிந்து – இரங்கி, அருள் சித்தி – நும் திருவருளாகிய சித்தியினால், வீங்கிய வலித்து – மிக்கதாக அழைத்துக்கொண்டு, விழு சுக நகர் புக – சிறந்த சுகம் எனும் நகரினை அடையவேண்டி, திருவடி சிறு தொழும்பு எனும் சுரத்து உற்றுழி – திருவடித் தொண்டு எனும் சுரத்தை அடைந்த போது, வாதனைக் கொடுமரம் – வாதனை என்னும் வில்லும், போதம் படுகணை – பாசஞானம் பசுஞானம் எனும்

கொல்லும் அம்பும், ஏந்திய – ஏந்தியுள்ள, தத்துவ சுற்றம் வாய்த்தது – தத்துவங்கள் என்னும் சுற்றத்தார் வந்து சேர்ந்ததால், நெஞ்சு உலர்ந்து. இனைந்து அஞ்சினன் – மனம் வற்றி வருந்தி அஞ்சினேன் என்றவாறு.

**குறிப்புரை:** இஃது உருவக அணிப்பாடல். இடைச் சுரத்துத் தமர்வரக் கண்ட தலைவி அஞ்சுதல் எனும் அகத்துறைப் பொருள் கொண்டது. தலைவி ஒருத்தி, தான் விரும்பிய தலைவனுடன் களவொழுக்கத்தில் இருந்தவள், பெற்றோரால் அவனுக்கு மணந்து கொடுக்க இயலாத நிலையில், தோழியானவள், தன்னைத் தலைவனுடன் சேர்க்க இரவில் ஊரை விட்டுக் காட்டுவழி வந்தபோது, தலைவியைக் காணாத தந்தை முதலிய சுற்றத்தார் ஊரவர் யாவரும் வில்லம்புகளுடன் சுரத்திடை வந்தபோது, அதுகண்ட தலைவியின் நெஞ்சம் வருந்துவதுபோல நூலாசிரியர் வருந்தியதாகக் கூறினார். எப்படி?

தம்மைத் தலைவியாகவும், சிவஞானியின் திருவருளைத் தலைவனாகவும், சிவசரணர் உபதேச மொழியைப் பாங்கியாகவும், அம்மொழி திருவருளுடன் சேர்ப்பதைப் பாங்கி தலைவியைத் தலைவனுடன் சேர்ப்பதாகவும், தலைவி தலைவனுடன் ஊரைக் கடப்பதுபோல் தாம் திருவருளைப் பற்றி உலகியல் வாழ்வு எனும் ஊரைக் கடப்பதாகவும், அவள் உடுக்கள் ஒளிவிடும் இரவில் செல்வதுபோலத் தாம் சிற்றறிவு வழிகாட்ட அஞ்ஞான இருளில் செல்வதாகவும், தலைவி பெற்றோர் உணராத படிச் செல்வதுபோல் தம்மைச் சார்ந்த மனம் முதலிய கருவிகள் உணராதபடிப் போவதாகவும், தலைவி தலைவன் அழைக்க உடன் செல்வது போல் தம்மை அருட்சித்தி வலிந்து ஈர்க்கச் செல்வதாகவும், திருமணத்துக் காக ஓர் ஊர் செல்வதுபோல் தாம் இன்பமான வீட்டுலகை

அலைடயச் செல்வதாகவும், அவள் இடையே சுரவழியை அடைதல்போல் தாம் திருவடித் தொண்டு எனும் சுரத்தை அடைவதாகவும், சுரத்தில் அவள் உறவினர் வில்லம்புகளுடன் தலைவனைத் தாக்க வருவது கண்டு அவள் அஞ்சுவதுபோல் தம்மைத் தத்துவங்கள் எனும் சுற்றம் சிவஞானியிடமிருந்து பிரிக்க வருவதாகவும், அதனால் தாம் நெஞ்சுவருந்தி அஞ்சியதாகவும் உருவகமாகக் கற்பித்துக் கூறினார்.

கள்வழித் தோன்றல் - கள்வொழுக்கத் தலைவன். சுரம்-பாலைவன்வழி இரவில் உடுக்கள் ஒளிவிடுதல் போல அஞ்ஞான நிலையில் சிற்றறிவுகள் விளங்கின என்றபடி. இடைஇருளில் என மாறுக கருவி - மனம் புத்தி சித்து அகங்காரம் என்பன சரணர் செம்மொழி - சிவசரணரின் உபதேச மொழி; அது பாங்கியாகக் கூறப்பட்டது சிவஞானியின் திருவருளை தலைவன் திருவடித் தொண்டு செயும் இடம் சுரம் எனப்பட்டது தம் உடம்பில் உள்ள தத்துவங்கள் சுற்றமாம் தத்துவங்கள் இருபத்தாறு அவை பற்றி வல்லார்வாய்க் கேட்க. வாதனைகளும் அவை பற்றிய அறிவும் வில்லாகவும் அம்பாகவும் கூறப்பட்டன வாதனை ஆணவம் கன்மம் மாயை எனும் மலங்களின் தொடர்பு கொடுமரம் - வில். படுகணை – அழிக்கும்அம்பு நினைந்து அஞ்சினன் என்க ஏகாரம் ஈற்றசை.

### வெண்பா

8. இணையாமை வேண்டுதியேல் நெஞ்சமே கேட்டி
எனையாள வல்ல இறைவன் – அனையாகித்
தன்னடைந்தார்த் தாங்கும் தூயவன் சிவஞானி
பொன்னடிக்கே சேராய் புகல்.




**கருத்துரை:** நெஞ்சமே! இவ்வுலகில் துன்பப்படாமையை விரும்புவாயானால் சிவஞானியின் திருவடிக்கே அடைக்கலமாவாயாக என்பது.

**பதவுரை:** நெஞ்சமே – என் மனமே! இனையாமை வேண்டுதியேல் – இவ்வுலகில் துன்பப்படாமையை விரும்புவாயானால், கேட்டி – அதற்கு யான் கூறுவதைக் கேட்பாயாக; எனை ஆளவல்ல இறைவன் – என்னை ஆட்கொள்ளவல்ல இறைவனும், தன் அடைந்தார் – தம்மைச் சரணடைந்த அன்பர்களை, அனை ஆகித் தாங்கும் தயவன் – தாய்போல் தாங்கும் இரக்கம் உள்ளவரும், சிவஞானி - சிவஞானி எனும் பெயருடையவரும் ஆகிய எம்குருநாதரது, பொன் அடிக்கே – அழகிய திருவடிக்கே, புகல் சேராய் – அடைக்கலம் ஆவாயாக என்றவாறு.

**குறிப்புரை:** இனையாமை – துன்பப்படாமை. அனை அன்னை என்பதன் இடைக்குறை. தயவு – இரக்கம். புகல் சேர்தலாவது – அடைக்கலமாக இடைவிடாது நினைத்தல். மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார் என்புழிப் போலக் கொள்க.

### கட்டளைக் கலித்துறை

9\. புகலப் புகல்எமக் காம்புண்
          ணியாநின் புகழ்ப்பெயாதான்
சகலத் தனியுருக் கொண்டனை
          யாயினும் தான்ஒருத்தன்
உகளப் புணர்ச்சியின் உற்றுறக்
          கொண்டதென் ஒருமவர்க்(கு)
அகலத் தனிப்புக ழாயடி
          யோமுக் கருள்செய்தியே.

**கருத்துரை:** சிவஞானியே! நும் பெயரே எமக்குப் புகலிடமாம் நீர் சகலவுருவாகிய மனிதவுருக் கொண்டுள்ளீர் எனினும் சிவபிரான் நும்மொடு இருவகை ஐக்கிய நிலையும் கொண்டது என்னை? என்பது.

**பதவுரை:** புண்ணியா – புண்ணியரே!, ஓரும் அவர்க்கு - ஆராய்ந்து பார்ப்பவர்க்கு, அகல் அத் தனிப் புகழாய் – அறிவுக்கெட்டாமல் அகலுகின்ற அத் தனிப்புகழ் உடையவரே!, நின்புகழ்ப் பெயர் – நும் திருப்பெயரானது, புகல – யாவரும் போற்றும்படி, எமக்குப் புகல்ஆம் – எமக்குப் புகலிடமாகும்; சகலத் தனி உருக் கொண்டனை ஆயினும் – மனிதத் தனிவடிவம் கொண்டுள்ளீர் என்றாலும், ஒருத்தன்தான் –ஒப்பற்ற சிவபிரானே, உகளப் புணர்ச்சியின் உற்று உறக் கொண்டது என் - இருவகை ஐக்கிய நிலையை நும்மொடு கொண்டது எப்படி? அடியோமுக்கு அருள் செய்தி – அடியேங்களுக்கு உரைத்தருள்வீராக என்றவாறு.

**குறிப்புரை:** சிவஞானி எனும் பெயரே யாவர்க்கும் அடைக்கலம் ஆகும் சிவஞானியாக மனிதவடிவில் இருந்தாலும் சிவனோடு ஐக்கியம் ஆனார். அஃது எப்படி? என்பது வினா வினாவுடன் பாடல் முடிந்தது விடை நாமே கொள்ளல் வேண்டும். உகளம் – இரண்டு உகளப் புணர்ச்சி-இருவகைப்புணர்ச்சி; அதாவது இருவகை ஐக்கியம்.

உயிர்கள் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் என மூன்று வகைப்படும் விஞ்ஞானத்தால் பந்தம் அற்றவர், பிரளய காலத்துப் பந்தம் அற்றவர், பந்தத்தோடு கூடியவர் என முறையே அவர் கூறப்படுவர். முதலாமவர் ஆணவமலம் ஒன்றே உடையவர். இரண்டாமவர் ஆணவம் கன்மம் எனும் இருமலம் உடையவர். மூன்றாமவர் ஆணவம் கன்மம் மாயை எனும் மும்மலம் உடையவர். விஞ்ஞான + அகலர் – விஞ்ஞானாகலர், அது விஞ்ஞானகலர் என வந்தது.

பிரளய + அகலர்-பிரளயாகலர். ச + கலர் - சகலர். கலம் - பந்தம். சகலவுரு என்றது பந்தத்தொடு கூடிய மனித வடிவை. அச்சகல வடிவுடைய நும்மை இறைவன் இருவகை ஐக்கியம் கொண்டது என்னை? என வினவியவாறு

பரசிவமானது இலிங்கம் எனவும் அங்கம் எனவும் பிரியும். இலிங்கம் சிவம்; அங்கம் உயிர்.

இலிங்கமானது ஆசாரலிங்கம், குருலிங்கம், சிவலிங்கம் சங்கமலிங்கம், பிரசாதலிங்கம், மகாலிங்கம் என ஆறாக அமையும்.

அங்கமானது பக்தன் மகேசன் பிரசாதி பிராணலிங்கி சரணன் ஐக்கியன் என ஆறாகி மேற்கூறப்பட்ட இலிங்கங்களுடன் அறுவகைப் பக்தியால் தொடர்பு கொண்டு ஒன்று சேரும். இந்நிலையின் அங்கமானது இலிங்கத்துடனும் இலிங்கமானது அங்கத்துடனும் ஒன்றுபடும். இரண்டும் ஒன்றில் ஒன்று ஐக்கியப்படுதலையே பாடலில் உகளப் புணர்ச்சி என்றார். இவ்வைக்கியத்தையே வினாமூலம் விடையாக வேண்டினார். இதன் விளக்கத்தைக் குருமூலம் அறிக. உற்றுறக் கொள்ளல் - பிரிவின்றிப் பொருந்தக் கொள்ளல். ஓர்தல் ஆராய்தல். சிவஞானியின் புகழ் ஆராய்ந்தறிதல் இயலாதது என்றபடி. ஏகாரம் ஈற்றசை- அருள்செய்தியே என ஈண்டும் கனிச்சீர் வந்தது

### நேரிசையாசிரியப்பா

10. செய்யவாய்ப் பைந்தொடிச் சேயிழை யொருத்தி
உய்தரு மகவை ஒருங்குறப் பெறுமுனர்த்
தன்னுயிர்க் காதலன் தணந்தொரு மாற்றான்
பன்னுறு போகம் பற்றுறக் கண்ட(து)
என்ன என்னை இனைவுற விடுத்துச்

சாக்கிரத் தனிநகர்த் தத்துவர் அலர்செய
மாக்கரு ணைக்கட லாய வள்ளல்
மயிலா சலத்தெம் மன்ன
பயிலா ரிடைநீ பட்டவா றெவனே.

**கருத்துரை:** மயிலாசலத்து அரசே! தன்கணவன், தான் ஒரு மகவைப் பெறுமுன்னரே வேறொருத்தியிடம் இன்பம் அனுபவிப்பது கண்டு வருந்தும் மனைவிபோல, என்னை யாட் கொண்ட நீர், எனக்கு அருள் செய்வதை விட்டு யான் வருந்துமாறு நும்மிடம் தொண்டுபூணாத பிறர்க்கு அருள் செயச் சென்றது ஏன்? என்பது.

**பதவுரை:** மா கருணைக் கடல் ஆய வள்ளல் - பெரிய கருணைக் கடலாகவுள்ள வள்ளலே!, மயிலாசலத்து எம் மன்ன - மயிலமலை மீதுள்ள எம் அரசே!, செய்ய வாய் பைம்தொடி சேயிழை ஒருத்தி - சிவந்த வாயையும் அழகிய தொடியையும் செம்மையான அணிகளையும் உடைய பெண், உய்தரு மகவை ஒருங்குஉறப் பெறுமுனர் - தனக்கு உய்வைத்தரும் பிள்ளையை முறையாகப் பெறுவதற்கு முன்னமேயே, தன் உயிர் காதலன் - தன் உயிரனைய கணவன், தணந்து - தன்னை விட்டு நீங்கி, ஒரு மாற்றாள் - வேறு ஒருத்தியிடம், பன் உறு போகம் பற்று உற கண்டது என்ன - பேசப்படும் இன்பத்தையடை வதைக் கண்ட போது வருந்தும் வருத்தம் போல, என்னை இனைவுற விடுத்து - என்னை வருந்துமாறு விட்டு விட்டு, சாக்கிரம் தனி நகர் - விழிப்பு நிலையாகிய தனித்த நகரில், தத்துவர் அலர் செய - மனம் முதலிய தத்துவங்கள் பழியை விளைக்க, பயிலாரிடை - அதனால் நும்பால் பழகித் தொண்டு செய்யாதவரிடத்து, பட்டவாறு எவன் - போய்த் தங்கியவாறு என்னை? என்றவாறு.

**குறிப்புரை:** ஆசிரியர் தாம் சிவஞானியின் அணுக்கத் தொண்டராய் இருந்து அவரால் ஆதரிக்கப் பெற்றுத் தொண்டு செய்து வரவும், சிவஞானி மற்றவர்க்கு அருள் செய்தது கண்டு பொறாது கூறியதாக அமைந்தது இப் பாடல். இப்பாடல் தம் காலத்துப் பதினான்காம் பட்டம் சிவஞான பாலய சுவாமிகள் பற்றியதாகவே அமைந்தது. உய்தருதல் – உய்தலைத் தருதல். உய் முதல்நிலைத் தொழிற்பெயர். பன்னுறுதல் – அடிக்கடிப் பேசுதல். அடிக்கடிப் பேசி மகிழ்தற்கான போகம் பன்னுறு போகம் எனப்பட்டது. மனைவி வருந்த மாற்றாளிடம் போகம் துய்ப்பது போல நும்மால் ஆட்கொள்ளப்பட்ட யான் வருந்த மற்றவர்க்கு அருள் செய்தீர் என்றபடி. சாக்கிரம் – விழிப்பு நிலை. உலகில் விழிப்பு நிலையில் இருக்கும் மக்களை அவர் மனம் முதலிய தத்துவங்கள் தம் போக்கில் இழுத்துத் துன்பம் செய்யும். அப்படித் துன்பம் செய்வதால் நும்மிடம் வந்து தொண்டு புரியாதவரிடம் நீர் சென்று அருள் புரிந்தவாறு என்? என்றபடி.

ஆசிரியர் தம்மை மனைவியாகவும் தம் அறிவைக் கெடுக்கும் மனம் முதலிய தத்துவங்களை வேற்று மகளிரா கவும் சிவஞானி தமக்கு அருளாது தத்துவங்களில் சேர்ந்து அவற்றின் போக்கின்படி நடந்து அவற்றை மகிழ்விப்பதா கவும் அதனால் தாம் வருந்துவதாகவும் இப்பாடலின் கருத் தாகக் கொள்க. மனைவி மகப் பெறாமை தான் வீட்டின்ப சுகத்தையடையாமையைக் குறித்தது. ஏகாரம் ஈற்றசை.

### வெண்பா

11\. எவனென்னை யாளுடையான் எல்லாம் உடையான்
எவன்எல்லாம் வல்லான் எவன்என் – அவலம்
மதியான் மதியோன் மதியா மதியான்
அதியா னவன்ஞானி யாம்.

**கருத்துரை:** எல்லாம் சிவஞானியாம் என்பது.

**பதவுரை:** எவன் என்னை ஆள் உடையான் – எவர் என்னை அடிமையாகக் கொண்டவரோ, எவன் எல்லாம் உடையான் – எவர் என் உடைமைகளைத் தம்முடையன வாகக் கொண்டவரோ, எவன் எல்லாம் வல்லான் – எவர் எல்லாவற்றிலும் வல்லவரோ, எவன் என் அவலம் மதியான் – எவர் என்னுடைய துன்பங்களைப் பொருட் படுத்தாமல் போக்குபவரோ, எவன் மதியோன் மதியா மதியான் – எவர் அறிவாளனாலும் அறிந்து மதிக்க முடியாத பேரறிஞரோ, எவன் அதியான் – எவர் யாவற்றுக்கும் அப்பாற்பட்டவரோ, அவன் ஞானிஆம் – அவரே சிவஞானியாவர் என்றவாறு.

**குறிப்புரை:** எவன் என்பதை வேண்டும் இடங்களில் கூட்டுக. ஆள் உடைமை – அடிமையாக உடைமை. அவலம் மதியான் –அவலத்தைக் கருதாமல் அழிப்பவன். மதியோன் – அறிஞன். மதியன் என்பதன் நீட்டம். மதியா மதியான் – அளவிட முடியாத பேரறிஞன். மூன்றாமடி முற்றுமோனைத் தொடரில் வந்தது. மதியான் முன்னையது எதிர்மறையிலும் பின்னையது உடன்பாட்டிலும் வந்தன. ஒரூஉ முரண் தொடை. அதியான் – மனம் வாக்குக் காயங்கட்கு அப்பாற் பட்டவன்.

### கட்டளைக் கலித்துறை

12. அதியா னவன்ஞானி யானநற்
பேர்கொண் டருளியிங்கு
வதியான் எனில்எனைப் போலெனைப்
பன்னாள் வருத்திநின்று
புதியான் எனச்சில போகம்
புணர்க்கப் பொருந்துவினை
கதியான் காணுவ துண்டோ
கனைகடற் காசினிக்கே.

**கருத்துரை:** சிவபிரான் இவ்வுலகில் சிவஞானி எனப் பெயர் கொண்டு என்போல் மானிடப் பிறவி கொண்டு வசிக்கவில்லையென்றால், அவர் என்னை வருத்திச் சில தொண்டில் ஈடுபடுத்த, அத்தொண்டுகளுக்குப் பொருந்திய தொழில்களை யான் செய்ய அத்தொண்டுகளே வீடுபேற்றுக் குரியனவான தன்மையை யான் அறிதல் உண்டாகுமோ? ஆகாது என்பது.

**பதவுரை:** அதிஆனவன் – எல்லாவற்றுக்கும் அப்பாற் பட்ட சிவபிரான், கனைகடல் காசினிக்கு – ஒலிக்கும் கடல் சூழ்ந்த உலகத்தில், இங்கு – இம்மயிலத்தில், ஞானிஆன நல்பெயர் கொண்டருளி – சிவஞானி என்ற நல்ல பெயரைக் கொண்டு, எனைப்போல் வதியான் எனில் – என்னைப் போல மனித வடிவில் வசிக்கவில்லையென்றால், எனை பல் நாள் வருத்தி நின்று – என்னைப் பல நாளாக வருத்தி யிருந்து, புதியான் என – வீடுபேறளிக்கத் தகுதியற்ற அயலான் என்று கருதி, சிலபோகம் புணர்க்க – சில இன்பமான தொண்டுகளில் ஈடுபடுத்த, பொருந்துவினை – அவற்றிற் பொருந்தி யான் செய்யும் வினைகளே, கதிஆன – வீடுபேற்றுக்குரியனவான விதத்தை, காணுவது உண்டோ – யான் காணுதல் உண்டாமோ? ஆகா என்றவாறு.

**குறிப்புரை:** ஞானியான நற்பெயர் – சிவஞான பாலைய தேசிகர் எனும் பெயர். பெயர்க்கு நன்மையாவது நினைந்தாரை வாழவைக்கும் தன்மை. இங்கு என்றது அவர் தங்கும் மயில மலையை. வதிதல் – வசித்தல். எனைப் போல் வதியான் எனில் என மாறுக. பன்னாள் வருத்துதல் என்றது சீடனாக ஏற்கப் பல வழிகளில் பலநாள் சோதித்ததை. புதியான் – அயலான்; வீடு பேற்றுக்கு அயலானவன்; அதாவது இன்றும் பக்குவப் படாதவன் என்பதாம். சிலபோகம் புணர்த்தலாவது சில

தொண்டுகளில் ஈடுபடுத்தல். இன்பம் தருதலின் தொண்டு போகம் எனப்பட்டது. பொருந்து வினை என்றது அத்தொண்டுகளுக்குப் பொருத்தமாக மேற்கொள்ளும் அறச்செயல்களை. அச்செயல்களே வீடுபேற்றுக்குரியவாயின என்றபடி. கதி - வீடுபேறு. கதிஆன – வீடுபேற்றுக்கு ஆனவற்றை; வினையாலணையும் பெயர். காணுவது - உணர்வது. காசினிக்கு காசினிக் கண் என ஏழாம் வேற்றுமைப் பொருளது; உருபுமயக்கம். ஏகாரம் ஈற்றசை.

இறைவனே உலகில் மனித வடிவில் குருவாக வந்து உயிர்களுக்கு அருள்வன் என்பது இதனாற் கூறப்பட்டது.

ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தவிட்டு
அன்னியம் இன்மையின் அரன்கழல் செலுமே

என்னும் சிவஞான போதச் சூத்திரம் இங்கு நினைதற்பாற்று.

### நிலைமண்டில ஆசிரியப்பா

13. காசினி கிடந்து மூசுறு மணலினும்
கணிப்பருங் கோடி கண்ணரும் வேதரும்
இணைப்புறக் காத்தும் இனிதெனப் படைத்தும்
அயர்ந்தனர் ஒழிந்தனர் ஆக அவ்வயிற்று
உயர்ந்தன அளக்கும் சொற்றிறம் இன்றுஇவ்
ஏது வினையெனில் எந்தைஐஞ் சத்தி
ஓதும் ஐந்தொழில் ஓவற நடத்திக்
கருவிகள் அனைத்தினும் கலந்துநின் றணவேல்
மருவுதல் ஒழியாது வருங்கா லத்தும்
ஆக என்றினி அலைஓய் வதியான்
சோக மோகத் துன்புஅற அருளுதி;

ஏக நாயக! என்னுயிர்க் கிழவ!
பாகர்தம் உளத்துஅமர் பண்ணவ! முக்கண்
மறைத்தவ! மயூர மால்கிரி வாண!
சிறைத்தமம் அறுக்கும் சிவஞான தேசியே!

**கருத்துரை:** சிவஞான தேசிகரே! என்னைப் பல பிரமர்கள் படைத்தும் திருமால்கள் காத்தும் தம் தொழில் களில் ஓய்ந்து விட்டனர். என் பிறவிகளை அளந்து கூறச் சொல் இல்லை. இதற்குக் காரணம் என் வினை. நும் ஐந்து சத்திகள் தம் தொழில்களைச் செய்து என்னில் கலந்திருத்தலால், இனி வரும் காலத்தும் எனக்குப் பிறவி வருதல் தவிராது. எனவே, யான் சோக மோகத் துன்பம் நீங்குமாறு பிறவிக்கடல் அலையும் ஓயாது. எனக்கு அது நீங்க அருள்வீராக என்பது.

**பதவுரை:** ஏகநாயக – தனிநாயகனே!, என் உயிர்க் கிழவ – என் உயிர்க்கு உரியவரே!, பாகர் உளத்து அமர் பண்ணவ – பக்குவம் உடையவரின் உள்ளத்தில் விரும்பித் தங்கும் தேவரே!, முக்கண் மறைத்தவ – மூன்று கண்களை மறைத்து இரு கண்களுடன் உள்ளவரே!, மால் மயூர கிரிவாண – பெரிய மயில மலையில் வாழ்பவரே!, சிறை தமம் அறுக்கும் சிவஞான தேசியே – சிறையாக வுள்ள தாமத குணத்தைப் போக்கும் சிவஞான பாலைய தேசிகரே!, எந்தை – எந்தையே!, காசினி கிடந்து மூசுறு மணலினும் – உலகில் கிடந்து மொய்த்துள்ள மணல் அளவினும், கணிப்ப அரும்கோடி வேதரும் கண்ணரும் – அளவிடற்கரிய கோடியளவான பிரமரும் திருமாலரும், இனிது எனைப் படைத்தும் – நன்றாக என்னைப் படைத்தும், இணைப்பு உறக் காத்தும் – உலகத் தொடர்பு கொள்ளுமாறு காத்தும், அயர்ந்தனர் ஒழிந்தனர் ஆக – இளைத்து ஒழிந்தனராக, அ வயிற்று – அவர்களால்

படைக்கவும் காக்கவும் இடமாக அமைந்த அவ்வயிறுகளுள், உயர்ந்தன அளக்கும் திறச்சொல் இன்று - உயர்ந்தன யாவை என்று அளந்து கூறுதற்குரிய சொல்லாற்றல் இல்லை; இ ஏது வினை எனில் - இதற்குரிய காரணம் என் வினையே என்றால், ஐ சத்தி - நும்முடைய ஐந்து சத்திகளும், ஓதும் ஐ தொழில் - சொல்லப்படும் அவர்கட்குரிய ஐந்து தொழில்களையும், ஓவு அற நடத்தி- ஒழியாது நடத்தி, கருவிகள் அனைத்தினும் கலந்து நின்றன வேல் - என்தத்துவக் கருவிகள் யாவற்றினும் கலந்து நின்றன என்றால், வரும் காலத்தும் மருவுதல் ஒழியாது- இனி வரும் என் பிறவிகளிலும் என்னுள் இருந்து தம் தொழில்களைச் செய்தல் தவிராது என்றால், இனி என்று அலை ஒய்வது - இனி எக்காலத்தில் எனக்குப் பிறவி அலை ஓய்வதாகும்; யான் - யான்; சோக மோக துன்பு அற அருளுதி - யான் சோகத்துக்குக் காரணமான மோகத் துன்பம் நீங்குமாறு திருவருள் செய்வீராக என்றவாறு.

**குறிப்புரை:** சிவபிரான் உலகை அயனாக இருந்து படைத்தும் மாலாக இருந்து காத்தும் உருத்திரனாக இருந்து அழித்தும் செயல் புரிவார் என்பர். இன் உலகில் பிறந்தார் தாம் செய்யும் புண்ணியப் பலன் காரணமாக அயனாகவும் திருமாலாகவும் உருத்திரனாகவும் பதவி உயர்வு பெற்று அத்தொழில்களைச் செய்வர் என்றும் கூறுவர். முன்னைய மூவரும் சம்பு (சிவ) பட்சத்தார் என்றும், பின்னைய மூவரும் அணு (உயிர்) பட்சத்தார் என்றும் கூறப்படுவர். ஆசிரியர் தம்மைப் படைத்தும் காத்தும் ஒய்ந்தனர் என்று கூறியவர் அணு பட்சத்தாராவர். வேதர் - பிரமர், கண்ணர் - கிருஷ்ணர்; திருமால்கள். படைத்தும் காத்தும் என மாறுக. இ ஏது - இதற்குரிய காரணம். சிவபிரான் சத்திகள் ஐந்தாவார் பராசத்தி ஆதிசத்தி இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தி என்போர். அச்சத்திகளால்

இவ்வுலகம் நடைபெறும்; உயிர்களின் தோற்றம் இருப்பு மறைவுகளும், அவ்வுயிர்களின் வினை வேறுபாடுகளும், அவற்றால் பிறவிகளும் நிகழும். உயிர்களின் அகவுடல் புறவுடல் தத்துவக் கூறுகளில் அச்சத்திகள் கலந்து தொழிற் படுத்தும். படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழில்களால் இவ்வுலகை உயிரை இயக்கும். அதனால் பிறவிகள் எண்ணற்றன வரும். அதனால் ஆசிரியர் ஐஞ்சத்தி ஐந்தொழில் இயற்றித் தத்துவங்களில் கலந்து நிற்பதால் இனி என் வரும்காலத்தும் பிறவி ஒழியாது என்றார். பிறவி வருவதும் இருப்பதும் மறைவதுமாக இருத்தலின் அலை என்றார்.

சிவபிரானே சிவஞானியாதலின் முக்கண் மறைத்தவ என்றார். முக்கண் மறைத்தலாவது நெற்றிக்கண் மறைத்து மற்றை இரு கண்களுடன் இருத்தல் மனிதர்க்கு மனிதனாக வந்து அருள வேண்டுமாதலின் முக்கண் மறைத்தார் என்றபடி. மால் மயூரகிரி என மாறுக. தமம் -தாமத குணம். உயிர்க்கு அக்குணம் ஞானம் பெறவொட்டாது தனக்குள் அடக்கியுள்ளதால் சிறை எனப்பட்டது. தேசு - ஒளி. தேசுமயமானவன் தேசு. அது தேசிகன் என வரும்.

**வெண்பா (கிளி விடு தூது)**

14. தேசன் சிவஞான தேசி யெனையாண்ட
ஈசன் மயிலத் திளங்கிளிகாள் — பாசமுனீர்
வைத்தலிலே வைத்துடையாள் மற்றறியாள்
என்றெனிலை
மெய்த்திறமே சொல்வீர் விரைந்து.

**கருத்துரை:** மயிலத்து இளங்கிளிகளே! சிவஞான தேசிகரிடம் சென்று, "எம் தலைவியானவள் உம்மிடம் பாசம் கொண்டதன்றி வேறொன்றும் அறியாதவளாய்

நும்மையே நினைந்து உருகியுள்ளாள்" என்று என் நிலையை எடுத்துரைப்பீர்களாக என்று சொல்லி ஒரு தலைவி சிவஞானியிடம் தூது விடுத்தாள் என்பது.

**பதவுரை:** மயிலத்து இளம் கிளிகாள் - மயிலத்தில் உள்ள இளங்கிளிகளே!, தேசன் - ஒளிமயமானவரும், சிவஞானதேசி - சிவஞானதேசிகன் எனக் கூறப்படுபவரும், எனை ஆண்ட ஈசன் - என்னை ஆட்கொண்ட ஈசனும் ஆகிய என் குருநாதர் முன்னர், விரைந்து - விரைவாகச் சென்று, முன் நீர் பாசம் வைத்தலில் - முன்னதாக நீவிர் திருவருளை எம் தலைவியிடம் வைத்த காரணத்தால், வைத்து உடையாள் - அவளும் நும்மிடம் அப்பாசத்தினை வைத்துள்ளாள், மற்று அறியாள் - வேறு ஒன்றும் அறியமாட்டாள்; என்று - என்று இப்படியாக, என் நிலை மெய் திறம் சொல்வீர் - என் நிலைமையாகிய இவ்வுண்மைத் தன்மையைக் கூறுவீர்களாக என்றவாறு.

**குறிப்புரை:** ஒரு தலைவி தன்னிடம் அன்பு வைத்த தலைவன் பிரிந்திருக்க, அவனிடம் தன் வருத்தத்தைச் சொல்லுமாறு கிளிகளைத் தூது விடுவதுபோல ஆசிரியர், தம் குருவாகிய சிவஞானியிடம் தம் குறை சொல்லுமாறு கிளிகளைத் தூது விடுவதாக அமைந்திருந்தாலும், உயிரை ஆட்கொண்ட சிவஞானியாகிய சிவபிரான் அதனைத் தம்மிடம் ஐக்கியப்படுத்திக் கொள்ளாதிருக்க, அது பொறாமல் உடன் ஐக்கியப்படுத்திக் கொள்ள வேண்டு வதாகக் கொள்க. தேசன் என முன்வந்தமையின் சிவஞானதேசி என்பதைப் பெயராகக் கொள்க. சிவஞானி தாமே முதலில் ஆசிரியரை ஆட்கொண்டமையால் நீர் முன்பாசம் வைத்தலில் என்றார். சிவஞானி வைத்த பாசம் திருவருள்; தலைவி (ஆசிரியர்) வைத்த பாசம் அன்பு.

## கட்டளைக் கலித்துறை

15. விரையாதென் விண்ணப்பம் கேட்டருள்
ஒன்று வியன்மயிலத்
தரையாநின் ஆள்என ஆட்பட்ட
பின்னர்அந் நான்முகனும்
வரையாம் உருவ மறலியும்
தம்முடல் வைத்தவடு
உரையாத புத்தி கொடுதொடு
வார்கொல்உன் மத்தனென்றே.

**கருத்துரை:** மயிலத்து அரசே! ஒரு விண்ணப்பம் கேட்டருள்க. நான்முகனும் எமனும் நும்மால் தங்கட்கு நேர்ந்த காயங்களை எண்ணாத அறிவுடன் நும்மால் ஆட்கொள்ளப்பட்ட என்னைப் படைக்கவும் அழிக்கவும் தொடுவார்களோ? என்பது.

**பதவுரை:** வியன்மயிலத்து அரையா – பெரிய மயில மலையரசே!, என் விண்ணப்பம் ஒன்று – என் விண்ணப்பம் ஒன்றை, விரையாது கேட்டருள் – விரைந்து அப்பால் செல்லாமல் கேட்டருள்க; அ நான்முகனும் – அந்த நான் முகனும், வரை ஆம் உருவ மறலியும் – மலைபோலும் உருவம் உடைய எமனும், தம் உடல் வைத்த வடு – தம் உடல்களில் நும்மால் வைக்கப்பட்ட வடுக்களை, உரையாத புத்தி கொடு – நினையாத புத்தியைக் கொண்டு, உன் மத்தன் என – பயித்தியக்காரர் போல; நின் ஆள் என ஆட்பட்ட பின்னர் – நும் அடிமையாக யான் ஆட் கொள்ளப் பட்ட பின்னர், தொடுவார் கொல் – என்னைத் தொடு வார்களோ? கூறுக என்றவாறு.

**குறிப்புரை:** அரையன் – அரசன்; அகர ஐகாரப் போலி. இப்போதுள்ள இவ்வுயிரை உடம்பினின்றும் பிரித்

தலாகிய அழித்தலைச் செய்ய எமனும், பின்னர் மீளப் படைத்திட வேண்டிப் பிரமனும் என்னைத் தொடுவார்களோ என வினவியவாறு. இருவர்க்கும் உள்ள உடல் வடுவாவன:

1 ஓம் எனும் பிரணவப் பொருள் அறியாத காரணத்தால் முருகன் அவன் தலையில் குட்டிச் சிறை வைத்தார் என்பது புராணம். முருகனே சிவனாதலின் அச்சிவனே சிவஞானியாதலின் அவர் பிரமனுக்குத் தலையில் குட்டி வடுவுண்டாக்கியதாகக் கொள்க.

2 மார்க்கண்டேயனுக்காக எமனை உதைத்து வடுவுண்டாக்கினார் சிவபிரான் என்பதும் புராணம்.

பிரணவப் பொருளறியாது வடுப்பட்டதை மறந்து பிரமன் நும்மால் பிரணவப் பொருள் அறிவுறுத்தப்பட்ட என்னைப் படைத்தலுக்காகத் தொடுவனோ என்றபடி. அப்பிரணவத்தைக் கூறிய தொண்டனாகிய மார்க்கண்டேயனைப் பாசம் வீசிப் பிடிக்க முயன்றமையால் நும் காலால் உதைபட்ட வடுவை மறந்து எமன் நும் தொண்டனாகிய என்னை இவ்வுடலை விட்டு நீக்கும் அழித்தல் செய்யத் தொடுவனோ என்றபடி. உன்மத்தன் என்பது உன்மத்தர் எனும் பன்மைப் பொருளது. உரையாத – நினையாத. தொடுதல் வினையை, முன்னர் எமனுக்கும் பின்னர்ப் பிரமனுக்கும் கொள்க; இவ்வுடலை அழித்த பின்னரே பிரமன் படைக்க வேண்டும் ஆகலின். ஏகாரம் ஈற்றசை.

### நேரிசையாசிரியப்பா

16. என்றும் பிரியா ஏந்திழை ஒருத்திக்கு
அன்று வெளிப்பட்ட அப்பெரும் கோலம்
நின்றுநான் முகனும் நெடிய மாலும்
இன்றும் காணார் இலங்கினர் நிற்ப

இன்னர்உள் கெழுமி யான்என நின்றேற்கு
உன்னருள் அதனால் ஊன்உயிர் போன்றுஉள்
மன்னினாய் வெளிப்பட மற்றும்யான் எனவே
துன்னினாய் அகற்ற எனில்இது சொல்லள
வாயுறின் ஆமே அருளாள நாயினேன்
பொருளள வறியாப் புன்மை தெரிந்து
மருளறத் தேற்றுதல் மயிலத்
தருவளர் சிவஞான ஐய!நின் கடனே.

**கருத்துரை:** சிவஞானஐய! திருமாலும் பிரமனும் அடிமுடி காணாமல் ஒன்று கூடி நின்றனர். யான் என அகங்காரம் கொண்டு நின்ற எனக்கு அருளால், உடம்பில் உயிர்போல் என் உள்ளே நின்றீர். வெளிப்படையாக நீரும் யானுமாக இரு நிலையில் உள்ளீர். இந்த இருவேறு நிலையைப் போக்குக எனின், அந்த ஒருநிலை தத்துவமசி எனும் ஒரு சொல்லளவாக அமையின் உண்டாகும். அத்தத்துவமசியின் பொருள் அறியாப் புல்லனாகவுள்ளேன்; அதைத் தெரிந்து என் மயக்கம் தீரத் தெளிவித்தல் நும் கடமையாகும் என்பது.

**பதவுரை:** அருளாள - அருளாளரே!, மயிலம் தருவளர் சிவஞானஐய - மயிலமலைக் கற்பகத்தருவாக எழுந்தருளியுள்ள சிவஞான பாலைய தேசிகரே!, என்றும் பிரியா ஏந்திழை ஒருத்திக்கு - எக்காலத்தும் பிரியாது இடப்பக்கம் அமர்ந்திருக்கும் ஏந்திழையாகிய பார்வதி தேவியார்க்கு, அன்று - அவர் இமய மலையில் நும்மை நோக்கித் தவம் செய்த காலத்தில், வெளிப்பட்ட - வெளிப்படத் தோன்றிய, அப்பெரும் கோலம் - அந்த பெரிய ஒளிமயமான திருவுருவத்தை, நான்முகனும் நெடியமாலும் - பிரமனும் நீண்ட திருமாலும், இன்றும் காணார் நின்று இலங்கினர் நிற்ப - இன்றும் காணாமல் நின்று கூடினர் இருக்க, யான்

அடியேன், இன்னர் உள் கெழுமி - ஆணவமாகிய குற்றம் என் உள்ளத்திலே பொருந்தியுள்ளமையால், யான் என நின்றேற்கு - யான் என நின்ற என்னிடத்தில், உன் அருள் அதனால் - நும் திருவருளால், ஊன் உயிர் போன்று - உடம்பில் உயிர் வெளிப்படாதிருப்பதுபோல, மன்னினாய் - மறைந்து தங்கியுள்ளீர்; மற்றும் - மேலும், வெளிப்பட - யாவரும் காணும் படியாக, யான் எனவே துன்னினாய் - யான் தனித்தவன் என்று கூறும்படிப் பொருந்தியுள்ளீர், அகற்ற எனில் - நீர் நான் என்னும் இவ்விருவேறு நிலையினைப் போக்குக என்று யான் வேண்டினால், இது இந்த வேறுபாட்டு நீக்கமானது, சொல் அளவில் உறின் ஆம் - தத்துவமசி என்னும் சொல்லின் அளவாகப் பொருந்தின் ஆகும்; நாயினேன் - நாயேனாகிய யான், பொருள் அளவு அறியாப் புன்மைதெரிந்து - அச்சொல்லின் பொருள் இயல்பை அறியாத கீழ்மையை அறிந்து, மருள் அறத் தேற்றுதல் - குற்றமறத் தெளிவித்து ஆட்கொள்ளல், நின்கடன் - நுமது கடமையாகும் என்றவாறு

**குறிப்புரை:** திருமாலும் பிரமனும் அடிமுடி காண் எடுத்த வடிவம் பேரொளி வடிவமாயினும் அதைப் பார்வதிதேவியார் தவம்செய்தபோது எடுத்த வடிவமாகக் கூறியது ஓர் இலக்கணை. பார்வதி தேவியார் இமய மலையரசன் மகளாக வந்தபோது சிவபிரானையே மணக்கவேண்டும் என்று தவம் செய்தார் என்பதும் சிவபிரான் தோன்றி அருள் செய்தார் என்பதும் புராணம். காணார் - முற்றெச்சம். இலங்குதல் - அடிமுடி காணாமை தெரியும்படி நிற்றல். ஏந்திழை - அன்மொழித் தொகை. இன்னர் - குற்றம்; அது ஆணவம். ஆணவம் உள்ளவர் யான் என் முனைப்பாக எழுவர் ஊனுள் உயிர் மறைந்திருப்பது போல் தன்னுள் சிவஞானி மறைந்துள்ளார் என்றபடி. சிவஞானி தனியாக மனித வடிவில் இருத்தலின் தான்

வேறு சிவஞானி வேறு எனக் காணப்படும் நிலையைப் போக்கவேண்டி நின்றபோது, அந்நிலை, தத்துவமசி என்னும் மந்திரத்தின் தன்மை போலானால் வரும் என்றபடி. தத் – அது; துவம் – நீ; அசி – ஆனாய். அது நீ ஆனாய் என்றால் சிவமாக நீ ஆனாய் என்பது பொருள். தத்துவமசி என்பதைத் தொந்தத்தசி என மாற்றியும் உரைப்பர். அதுவாக நீ ஆனாய் என்பதை உணரும் போது சிவஞானி வேறு தான் வேறு என்ற உணர்வின்றி அவராகவே ஆகலாம் என்பது கருத்து. மருளறத் தேற்றுதலாவது – ஆணவம் போக்கித் தெளிவித்தல். ஏகாரம் ஈற்றசை.

**வெண்பா**

17. **கடன்உனக்கே யல்லால் கறைமிடற்றைக் காட்டா(து)**
**உடனுறைவாய் அன்றுதொட்டின்**
**றைக்கும் – மடன்அகல**
**வந்தாய் வெளியே மயிலா சலாவென்னைத்**
**தந்தாளச் சாற்றுமதென் சாற்று.**

**கருத்துரை:** மயிலாசலத்தவரே! எனக்கு நும்மைத் தந்து ஆட்கொள்வீராக என்று நும்மிடம் சொல்வது ஏன்? அது நுமக்கே கடமையன்றோ? கூறுக என்பது.

**பதவுரை:** கறை மிடற்றைக் காட்டாது உடன் உறைவாய் – எனக்கு நும் கறுத்த கழுத்தைக் காட்டாமல் என்னுடனேயே தங்கியிருப்பவரே!, அன்று தொட்டு – என்னைத் தோற்றுவித்த அக்கால முதலாக, இன்றைக்கும் - இன்று வரைக்கும், மடன் அகல வெளியே வந்தாய் – அன்பர் அறியாமை நீங்க கயிலையை விட்டு இவ்வெளி யுலகில் வந்தவரே!, மயிலாசலா – மயில மலையில் வீற்றிருப்பவரே!, என்னை – எனக்கு, தந்து ஆள –

உம்மைத் தந்து ஆட்கொள்ள, உனக்கே கடன் அல்லால் - உமக்கே கடமையாவது அல்லாமல், சாற்றும் அது - யான் உம்மிடம் "உம்மைத் தந்து ஆட்கொள்க" என்று சொல்லும் அது, என் - என்ன பேதைமை, சாற்று - கூறுக என்றவாறு.

**குறிப்புரை:** சிவபிரான் நஞ்சினால் கறுத்த கழுத்தை மறைத்துச் சிவஞானியாக வந்தார் என்றபடி. உடன் உறைதல் - ஊனுள் உயிர் போல் உயிரில் மறைந்து உறைதல். அன்று என்றது படைப்புக் காலத்தை; வெளியே வருதலாவது - உலகில் குருவடிவில் வருதல். மடன் - ஆணவத்தால் வரும் அறியாமை; அஞ்ஞானம். வெளி என்றது உலகை. வெளியே வந்தாய் என மாறுக. என்னை என்பது எனக்கு என வேற்றுமை மயக்கம். எனக்கு உன்னைத் தருதலாவது "தந்தது உன் தன்னைக் கொண்டது என் தன்னை" எனச் சங்கரனிடம் மாணிக்கவாசகர் கூறியது போல்வது.

### கட்டளைக் கலித்துறை

18. சாற்றுறு மாறறி யாமறை
யந்தத்துத் தான்உளவென்(று)
ஆற்றவும் இந்த அகிலமெல்
லாமும் அரற்றிநிதம்
போற்றுறு மாபொன் னடிப்போதென்
சிரத்துப் பொருந்தவைத்த
மாற்றறு நின்னருட் கென்னைகைம்
மாறு மயிலத்தனே.

**கருத்துரை:** மயிலத்தவரே! நும் திருவடி மலர்களை என் தலையில் பதிய வைத்த நும் அருட் செயலுக்கு என்ன கைம்மாறு செய்ய வல்லேன்! என்பது.

**பதவுரை:** மயிலத்தனே – மயிலத்தவரே!, இந்த அகிலம் எல்லாமும் – இவ்வுலகத்துள்ளார் யாவரும், சாற்று உறுமாறு அறியா – போற்றிப் புகழ்தல் உறுமாறு அறியாத, மறைஅந்தத்துத் தான் – வேத முடிவில் தான், உள என்று – உள்ளன என்று சொல்லி, ஆற்றவும் அரற்றி – மிகவும் சொல்லி, நிதம் போற்றுறும் – நாளும் போற்றும் படியான, மாபொன் போது அடி – சிறந்த பொற்றாமரை மலர்போலும் திருவடிகளை, என் சிரத்துப் பொருந்த வைத்த – என் தலையில் பதியுமாறு வைத்துத் தீக்கை செய்த, மாற்ற அருநின் அருட்கு – மாற்றல் இல்லாத நும் திருவருட்செயலுக்கு, கைம்மாறு என்னை – யான் செய்ய இருக்கும் கைம்மாறு என்னவுளது? இல்லை என்றவாறு.

**குறிப்புரை:** வேத முடிவின் அப்பாற் பட்டவர் இறைவன் ஆதலின் திருவடிகள் மறையந்தத்துத்தான் உள எனப் பட்டன. திருவடிப் போது என் சிரத்துப் பொருந்த வைத்த என்பது திருவடி தீட்சையைக் குறித்தது. ஏகாரம் ஈற்றசை. மயிலத்தனே எனக் கனிச்சீர் வந்தது.

### இணைக்குறள் ஆசிரியப்பா

19. மயிலத் திருந்த வான்குரு நாத!
வியலத் திருவிலி என்நெஞ் சிருந்த
அருட்டுறை யாடிய அங்கணா! அரசே!
இருட்டறை கிடந்த குருட்டும னேனைக்
கருணையின் எடுத்தும் அருளின்மெய் முதலிய
நான்கையும் கொடுத்துக் கொடுத்தநற் கோலத்து
அருமணி மிடற்றில் திருமணி தழைய
கழுக்கடை பிடித்தகை அழுக்கடை யாமே
ஒழுக்குற எம்மை இழுக்கில் அருட்குறி

தன்னொடு சின்முத் திரையது தாங்கி
ஆலடி யிருந்த சீலம் காட்ட
வந்தனை; எனக்குமுன் தந்தஅம் மெய்ம்முதல்
ஈரிரண் டினையும் ஓரிரண் டாக்கி
என்னையும் ஒன்றின் ஏற்க நின்றனை;
பொன்செய் வாணிபரிற் புகலும் வாசிகொண்டு
அந்தணா நடிக்கின் அதனால் உறுபயன்
என்னை யிங்குனக்கு அன்னது காணேன்
ஆதலின் நான்குஅளித்து மூன்றுவாங்
கினையென்(று)
ஏம்பல் இன்றி எடுத்தினி துரைத்து
முதல்அள வறியா விதத்துச்
சிறுவா ணிபம்செய் தனையெனும் அதற்கும்
குறைவிலை; நினக்கிறைவ
அதனால்,
கொடுத்ததை நினக்கிங் கெனக்கென மீட்டும்
எடுத்துக் கொண்டனன்; இன்னதால்
பெற்றது துயரலது உற்றிலன்; மற்றதற்கு
ஏதுஅறி யேன்போத
பிறர்க்கின்னா முற்பகற் செய்யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்எனப் பேசிய
சொற்றிறம் என்னத் துணிந்தேன்;
குற்றம் கோடற்கும் குறியிடன் இலவே.

**கருத்துரை:** குருநாதரே! மாயை என்ற இருட்டறையில் கிடந்த உயிராகிய என்னை எடுத்து, எனக்குத் தனு கரணம் புவனம் போகம் என்னும் நான்கையும் கொடுத்துத் தட்சிணாமூர்த்த வடிவம் காட்ட வந்தீர்;

எனக்கு முன் கொடுத்த நான்கையும் தனு புவனம் எனும் இரண்டாகச் சுருக்கி, அவற்றுள்ளும் தனுவில் என்னை இருக்கச் செய்தீர்; கொடுத்தது நான்கு; மூன்றை எடுத்துக் கொண்டு தனுவை மட்டும் கொடுத்தீர். இது பொன் வாணிகர் செயல். வாணிகராய் இருந்தும் அந்தணர் போல் நடிக்கிறீர்; அதனால் உமக்கு உறும் பயன் என்ன? அறியேன். நும்மைப் பற்றி நான்கு கொடுத்து மூன்றைப் பறித்துக் கொண்டீர் என்றேன். முதலின் அளவை அறியாமல் சிறிய வாணிபம் செய்தீர். இப்படிச் செய்வதால் சிறிதும் உமக்குக் குறைவில்லை. யான் நுமக்குக் கொடுத்த அப்போகம் புவனம் கரணம் ஆகியவற்றை மீளவும் யானே எடுத்துக்கொண்டேன்; அதனால் துயரடைந்தேனே யன்றி வேறு நன்மையடையவில்லை. இதற்கான காரணம் யான் அறியேன். இது "பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா, பிற்பகல் தாமே வரும்" எனும் பொய்யா மொழியின் பொருளாம் எனத் துணிந்தேன். இதனைக் குற்றமாக் கோடற்கும் இடம் இல்லை என்பது.

**பதவுரை:** மயிலத்து இருந்த வான் குருநாத – மயில மலையில் வீற்றிருக்கும் மேலான குருநாதரே! வியல் அத்திரு இலி என் நெஞ்சத்து இருந்த – பெருமையுள்ள அந்த வீடுபேற்றுக்குரிய காரணம் இல்லாத எனது நெஞ்சில் தங்கிய, அருட்டுறை ஆடிய – அருட்டுறையில் நடமாடிய, அங்கணா – கண்ணோட்டம் உடையவரே! அரசே – அரசரே! இருட்டு அறை கிடந்த – மாயையாகிய இருட்டறையில் கிடந்த, குருட்டு ஊமனேனை – குருட்டுத் தன்மையும் ஊமைத் தன்மையும் உடைய என்னை, கருணையின் எடுத்து – திருவருளால் நீக்கி, மருளின் – மயக்கத்தொடு பொருந்திய, அருளின் மெய் முதலிய நான்கையும் கொடுத்து – அருளோடு தனு கரண புவன போகம் எனும் நான்கையும் கொடுத்து, கொடுத்த

நல்கோலத்து – அவற்றைக் கொடுத்த நல்ல கோலத்தோடு, அருமணி மிடற்றில் திருமணி தழைய – அரிய நீலமணி போலும்கழுத்தில் உருத்திராக்கமணி விளங்க, கழுக்கடை பிடித்த கை – மழுவாயுதம் பிடித்த கையில், அழுக்கு அடையாமே – அழுக்குச் சேராதபடி, எம்மை ஒழுக்கு உற – எமக்கு நன்னெறி சேருமாறு, இழுக்குஇல் – குற்றம் இல்லாத, அருள்குறி தன்னொடு சின்முத்திரை அது தாங்கி – திருவருளுக்கு அடையாளமான சின் முத்திரையைக் கொண்டு, ஆல் அடி இருந்த சீலம் காட்ட – கல்லாலின் கீழ் இருந்த தன்மையைக் காட்ட, வந்தனை – குருவாக வந்துளீர்; எனக்கு – அடியேனுக்கு, முன்தந்த அம்மெய் முதல் ஈர் இரண்டினையும் – முன்னே கொடுத்த மெய் முதலிய நான்கினையும், ஓர் இரண்டு ஆக்கி – தனுபுவனம் என இரண்டாக்கி, என்னையும் – அடியேனையும், ஒன்றின் ஏற்க – தனுவாகிய ஒன்றினை ஏற்குமாறு, நின்றனை – அமைந்தீர்; பொன்செய் வாணிபரின் புகலும் வாசிகொண்டு – பொன்வாணிபம் செய்பவர் போலப் பேசும் பேச்சைக் கொண்டிருந்தாலும், அந்தணர் நடிக்கின் – அந்தணர் போல நடித்தால், அதனால் உறுபயன் உனக்கு இங்கு என்னை – அதனால் வரும் பயன் இவ்வுலகில் நுமக்கு என்ன உண்டு? அன்னது காணேன் – அதை அறியேன்; ஆதலின் – ஆதலினால், நான்கு அளித்து மூன்று வாங்கினை என்று – தனு கரண புவன போகங்களைக் கொடுத்துத் தனுவை மட்டும் எனக்கு விட்டு மற்றைய மூன்றையும் பறித்துக் கொண்டீர் என்று, ஏம்பல் இன்றி இனிது எடுத்து உரைத்து – மகிழ்வின்றி மிகவும் எடுத்துச் சொன்னேன்; முதல் அளவு அறியாவிதத்து சிறுவாணிபம் செய்தனை – முதலீட்டின் அளவினை அறியாத விதத்தில் சிறுவாணிபம் செய்தீர், எனும் அதற்கும் நினக்குக் குறைவு இலை – சிறிதும்

அதற்கும் நுமக்குக் குறைவு இல்லை, அதனால் - அதனால், நினக்கு கொடுத்ததை - நுமக்குக் கொடுத்தன வான கரணம் புவனம் போகங்களை, இங்கு எனக்கு என மீட்டும் எடுத்துக் கொண்டனன் - இங்கே எனக்கு வேண்டும் என்று மீளவும் யான் எடுத்துக் கொண்டேன்; இன்னதால் பெற்றது - இதனால் யான் அடைந்தது, துயர்-துன்பங்களேயாம்; அலது உற்றிலன் - அவையன்றி வேறு அடைந்தேன் இல்லை; அதற்கு போத ஏது அறியேன் - அதற்கு மிகவும் ஆன காரணத்தை அறியேன்; பிறர்க்கு இன்னா முற்பகல் செய்யின் - பிறர்க்குத் துன்பங்களை முற்பகலில் ஒருவர் செய்தால், தமக்கு இன்னா பிற்பகல் தாமே வரும் - செய்தவர்க்குத் துன்பங்கள் பிற்பகலில் தாமே வந்து சேரும், எனப் பேசிய சொல் திறம் என்னத் துணிந்தேன் - என்று சொன்ன சொல்லின் பயன் என்று துணிவுற்றேன்; குற்றம் கோடற்கும் - அதைக் குற்றமாகக் கொள்வதற்கும், குறி இடன் இல - குறிப்பிட்டுச் சொல்லும் இடங்களும் இல்லை என்றவாறு.

குறிப்புரை: திரு என்பதற்குத் திருவை அடைதற்குரிய ஞானம் எனக் கொள்க. அருள்துறை என்பது கோயிலின் பெயர். வெண்ணெய் நல்லூர் அருட்டுறை என்றது காண்க. அங்கணன் இரக்கம் உடையவன். சிவனே சிவஞானி யாதலின் நஞ்சால் கறுத்த கண்டத்தில் உருத்திராக்க மணி விளங்குவதாகவும் மழுவேந்திய கையானது சின்முத்திரை ஏந்தியிருப்பதாகவும் கூறப்பட்டது. கோலம் என்றது தட்சிணாமூர்த்தத்தை. ஒழுக்குற என்பது வலித்தல் விகாரம். சின் முத்திரை - ஞான அடையாளம். பெருவிரலைச் சுட்டு விரல்நுனி தொட்டிருக்க மற்றை மூன்று விரல்களும் நிமிர்ந்து நிற்கும்படியுள்ள அடையாளம் சின்முத்திரை யாகும். பெருவிரலாகிய சிவத்தைச் சுட்டு விரலாகிய உயிர் நிமிர்ந்த மூன்று விரல்களாகிய ஆணவம் கன்மம் மாயை

எனும் மூன்று மலங்களும் நீங்கக் கூடுதல் வேண்டும் என்பது சின்முத்திரையின் கருத்து. ஆல் அடி இருந்த சீலம் – கல்லால மரநிழலில் இருந்த தன்மை. அது தட்சிணா மூர்த்தியின் வடிவம். சிவஞானி அன்பர்க்கு உபதேசிக்கு முன் காட்டும் கோலம் அது.

இறைவன் மாயையில் கிடக்கும் உயிரைப் பிரித்து, உலகையும் அதில் போகப் பொருளையும் படைத்தும், உயிர்க்கு உடம்பையும் உடம்பில் மனம் முதலிய கரணங் களையும் படைத்தும் உயிரை உடம்பில் இருக்கச் செய்து உலவ விடுவான் என்பது சாத்திரம். உயிரானது உடம்பில் இருந்தவாறு போகத்தையும் உலகப் பற்றையும் உடம்பின் கரணங்களையும் விட்டு இறையுணர்வோடிருக்கச் செய்வது இறையருட் செயல். அதனால் போகம் உலகம் கரணம் எனும் மூன்றையும் இறைவன் எடுத்துக் கொண்டதாகக் கூறப்பட்டது. உயிர் உடம்பில் இருந்தவாறே வீடுபேற்றுக்கு முயல வேண்டுதலின் உடம்பு தனித்து நின்றது; அதனால் இறைவன் நான்கு கொடுத்து மூன்றை எடுத்துக் கொண்ட தாகக் கூறப்பட்டது. அவ்வாறு இறைவன் மூன்றை எடுத் தாலும் உயிர் பழவினைத் தொடர்பால் அம்மூன்றையும் பற்றுதலின் இறைவன் தான் எடுத்துக் கொண்ட மூன்றையும் உயிர்மீளத் தனக்கு எடுத்துக் கொண்டதாகக் கூறப்பட்டது. அப்படி எடுத்துக் கொண்டதால் அடைந்தது துன்பமே என்பதாம்.

> "பிறர்க்கின்னா முற்பகற் செய்யின் தமக்கின்னா
> பிற்பகல் தாமே வரும்"

என்பது திருக்குறள். சொல் திறம் – சொற்பொருள். முதலில் துன்பம் செய்வது போல் இறைவன் உயிர்க்குக் கொடுத்த கரணம் புவனம் போகங்களைத் தான் எடுத்துக் கொண்டது முற்பகல் செய்ததாகவும், உயிர் அவற்றை மீளவும் எடுத்துக் கொண்டது பிற்பகல் செய்ததாகவும்

கொள்க. எடுத்துக் கொள்ளுதல் அளவுக்கே உவமையைக் கொள்க; துன்புறல் கருத வேண்டா.

**வெண்பா**

20. இடனிலவே றென்னை எனக்குணர்த்திங் கென்ன
மடனுடைக்கு மாமலர்த்தாள் சூட்டிக் – கடனறியா
என்னுளத்தே புக்காயேல் எந்தாய் மயிலமென
நின்னிடத்தே என்குறையை நேர்ந்து.

**கருத்துரை:** எந்தாய்! உம்மை வணங்கி, 'என்னைப் பற்றி எனக்கு உரைத்தருள்க' என்று யான் வேண்ட, நீர் நும் திருவடிகளைத் தலைமீது பதித்து என் உள்ளத்தில் எழுந்தருளினால் நும்மிடம் என்ன குறை வரும்? என்பது.

**பதவுரை:** எந்தாய் – எந்தாய், நேர்ந்து – நும்மை வேண்டி, வேறு இடன்இல – நும்மைத் தவிர எனக்கு அருள் செய்ய வேறு இடங்கள் இல்லை; இங்கு – இங்கே, என்னை எனக்கு உணர்த்து – என்னை யார்என எனக்கு உணர்த்துவீராக, என்ன – என்று யான் வேண்ட, மடன் உடைக்கும் மா மலர்த்தாள் சூட்டி – அறியாமையைப் போக்கும் சிறந்த தாமரை மலர் போலும் திருவடிகளை என் தலையில் சூட்டி, கடன் அறியா என் உளத்தே – அதற்கு வேண்டிய பக்திக் கடமைகளை அறியாத என் உள்ளத்திலே, மயிலம் எனப் புக்காயேல் – இஃது யாம் இருத்தற்குரிய மயில மலையிடமாகும் என்று எழுந்தருளு வீராகில், நின்னிடத்தே – அதனால் நும்மிடத்து வரும், குறை என் – குறை யாதாம்? என்றவாறு.

**குறிப்புரை:** இடன் என்றது வேறு குருமார்களை. யான் யார் என்பதை யான் அறியுமாறு உணர்த்துக என்றபடி. கடன் என்றது வழிபாட்டுக்குரிய கடமைகளை மயிலத்தில் எழுந்தருளுவதுபோல என் உள்ளத்தில் புக

வேண்டும் என்றபடி. என் குறையை - என்ன குறையுடையீர். குறையை-முன்னிலை வினைமுற்று. நேர்தல்-வேண்டுதல்.

### கட்டளைக் கலித்துறை

21. நேராத வர்புரம் நீறெழ அன்று நெரிபுருவ
வாராயு மென்மல வெம்புர நீற்றல் அரிதுகொலாம்
பாராதி எட்டுரு வானாய் மயிலத்தெம் பண்ணவநின்
சீராயும் அன்பா திருக்கூட்ட மாயினும் சேர்த்தருளே.

**கருத்துரை:** முப்புரம் எரித்தற்கு நெரித்த புருவத்தை யுடையவரே! என் ஆணவம் கன்மம் மாயை எனும் முப்புரங்களை எரிப்பது நுமக்கு அரிதோ? இல்லை. அவற்றை எரிக்கவில்லை யென்றால், நுமது அன்பர் திருக்கூட்டத்திலாயினும் என்னைச் சேர்த்தருள்வீராக என்பது.

**பதவுரை:** பார் ஆதி எட்டு உருஆனாய் - நிலம் முதலான எட்டு வடிவங்களாக விளங்குபவரே!, மயிலத்து எம் பண்ணவ - மயிலத்தில் உள்ள எம்தேவரே!, அன்று - ஒரு காலத்தில், நேராதவர்புரம் - பகைவராகிய மூன்று அசுரர்களின் நகரங்களை, நீறுஎழ - சாம்பராகும்படி, நெரிபுருவ - நெரித்த புருவங்களையுடையவரே!, ஆராயும் - அறிஞரால் ஆராயப்படுகின்ற, என் மல வெம்புரம் - என்னுடைய ஆணவம் கன்மம் மாயை எனும் கொடிய முப்புரங்களையும், நீற்றல் - சாம்பராக அழித்தல், அரிது கொல் - நுமக்கு அரிதாகுமோ? அதைச் செய்ய வில்லை யானால், நின்சீர் ஆயும் - நுமது புகழைக் கருதுகின்ற, அன்பர் திருக்கூட்டமாயினும் - அன்பர் திருக்கூட்டத்தி லாவது, சேர்த்தருள் - சேர்த்தருள்வீராக என்றவாறு.

**குறிப்புரை:** நேராதவர் - பகைவர். தாரகாட்சன், கமலாட்சன், வித்துவன்மாலி என்னும் அசுரர் மூவர்

பொன் வெள்ளி இரும்புக் கோட்டை நகரங்களை ஆண்டு, அவற்றால் உலகைத் துன்புறுத்திவரத் தேவர் வேண்டு கோளால் சிவபிரான் போர்க்குச் சென்று அவற்றைச் சிரித்து எரித்தார் என்பது புராணம். சிரிக்கும் போது முகத்துப் புருவம் நெரிக்கப் படுதலின் நெரிபுருவ என விளிக்கப்பட்டது. முப்புரங்கள் போல ஆணவம் கன்மம் மாயை எனும் மும்மலங்கள் என்னைத் துன்புறுத்துகின்றன என்றபடி. அவற்றை எரித்துச் சாம்பராக்கவில்லை என்றால், நும் அன்பர் திருக்கூட்டத்திலாவது என்னைச் சேர்த்தருள்க என்று வேண்டியவாறு நிலம் நீர் தீ வளி வான் எனும்ஐம்பூதங்களும் சூரியனும் சந்திரனும் ஆன்மாவும் என்பனவும் ஆன எட்டு வடிவங்களாக விளங்குபவன் இறைவன். இவ்வடிவங்கள் அட்டமூர்த்தம் எனப்படும்.

"நிலம்நீர் நெருப்பு உயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோடு எண்வகையாய்ப்
புணர்ந்துநின்றான்"

என்பர் மாணிக்கவாசகர். இதில் உயிர் என்றது காற்றை; மைந்தன் என்றது ஆன்மாவை. ஏகாரம் ஈற்றசை.

### நிலைமண்டில ஆசிரியப்பா

22. அருள்உரு வசவ அண்ணலும் அண்ணல்
தெருள்உறும் அல்மச் செல்வனும் செல்வப்
பரிவு கயிலைப் பரமனும் பக்குவர்க்(கு)
ஒருநெறி யுதவ உற்றவா றலதுஇங்(கு)
இருவினைத் தொடரில் எனையுண ராத
வென்போல் யானாம் இயலா என்னைத்
தன்போல் ஆக்கத் தண்ணருள் கெழுமிப்
பக்குவம் பாராது இக்குவ லயத்தே

சிவஞானி யென்னத் திருக்கோலம் கொண்ட
தவஞான வடிவும் தான்ஒன் றுளதே.

**கருத்துரை:** வசவண்ணர் அல்லம தேவர் கயிலை யிறைவன் ஆகியோர், பக்குவப்பட்டவர்க்கு முத்திநெறி யுதவத் தோன்றினர்; அவர்கள்போல் அல்லாமல், பக்குவப் படாதவர்க்கும் தம்மைப் போலச் சிவமாக்கத் திருவுளம் கொண்டு சிவஞானி என்ற பெயருடன் திருக்கோலம் கொண்ட வடிவமும் ஒன்று இவ்வுலகில் உண்டு என்பது.

**பதவுரை:** அருள்உரு வசவ அண்ணலும் - அருளே திருவுருவாய் அமைந்த வசவதேவரும், அண்ணல் தெருள் உரு அலமச் செல்வனும் - அவ்வசவரால் தெளிவுறுத்தப் பெறும் அல்லமதேவராகிய செல்வரும், செல்வன் பரிவு கயிலைப் பரமனும் - அச்செல்வற்குப் பரிவுகாட்டும் கயிலைப் பரமேசுரரும், ஆகியோர், பக்குவர்க்கு ஒருநெறி உதவ - பக்குவப்பட்டவர்க்கு ஒரு வழி காட்ட, உற்றவாறு அலது - பூமியில் வந்தவாறுபோல அல்லாமல், இங்கு - இங்கே, இருவினைத் தொடரில் - இருவினைத் தொடர்பு காரணத் தால், வென்போல் என்னை உணராத - என்புற முதுகை யான் காணமுடியாதவாறுபோல் என்னை உணரமாட்டாத, யானாம் இயலா என்னை - தியானமும் செய்ய இயலாத என்னை, தன் போல் ஆக்க தண் அருள் கெழுமி - தம்மைப் போலச் சிவம் ஆக்கத் தண்ணிய அருளைப் பொருந்தி, பக்குவம் பாராது - என்பக்குவம் இன்மையையும் கருதாமல், இக்குவலயத்து - இப்பூமியில், சிவஞானிஎனத் திருக் கோலம் கொண்ட - சிவஞானி என்று துறவுக் கோலம் கொண்ட, தவஞான வடிவும் ஒன்று உளதே - மிக்க ஞான வடிவமும் ஒன்று உள்ளதே; அதையுணர்மின் என்றவாறு.

**குறிப்புரை:** வசவண்ணரும் அல்லம தேவரும் வீர சைவக் குருமார்களாகப் பக்குவர்க்கு முத்திநெறி காட்ட

வந்தவர்கள். சிவபிரானும் கோகழிக் குருமணி முதலான வராகப் பக்குவர்க்கு அருள் புரியவந்தவரே. ஆனால் பக்குவம் பாராது யாவர்க்கும் அருள்செய்யச் சிவஞானி என்ற பெயருடன் ஒரு தவஞானி இவ்வுலகில் வந்துள்ளார்; அறிமின் என்பது.

மாணிக்கவாசகருக்குச் சிவபிரான் கோகழிக் குருமணி யாய் வந்து அருள் செய்ததை அவர்,

"அரையாடு நாகம் அசைத்தபிரான் அவனியின்மேல்
வரையாடும் மங்கைதன் பங்கொடுவந் தாண்டதிறம்"

எனவும்,

"மருவார் மலர்க்குழலி மாதினோடும் வந்தருளி
அருவாய மறைபயில் அந்தணனாய் ஆண்டுகொண்ட
திருவான தேவன்"

எனவும்,

"குணங்களும் குறிகளும் இல்லாக் குணக்கடல்
கோமளத்தொடும் கூடி
அணைந்துவந் தென்னை ஆண்டுகொண் டருளிய
அற்புதம் அறியேனே"

எனவும் பிறவாறும் கூறியவற்றால் அறியலாம். ஒருநெறி – முத்திநெறி. இருவினை – நல்வினை தீவினை தொடர் - தொடர்பு. அவையிரண்டுமே முத்திநெறிக்குத் தடையாவன. வென் – புறமுதுகு. புறமுதுகை யான் பாராதது போல என்னை யான் பாராதவனானேன் என்றபடி. தியானம் என்பது முதற்குறையாய் யானாம் என நீண்டது. இயலா – ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். தன்போல் ஆக்குதல்- தம்போல் சிவமாக்குதல். உளதே என்பதன் ஏகாரம் ஆச்சரியப் பொருட்டு,

### வெண்பா

23. உளன்இலன்என் றெல்லாம் உரைக்கும் ஒருவன்
அளவறிந்திங் காள்வானே போல – வளமைத்
திருக்கோலம் கொண்டு சிவஞானி யாகி
இருக்கோல வந்தான் எனக்கு.

**கருத்துரை:** சிவபிரானே என் பக்குவம் அறிந்து ஆட்கொள்ள வேண்டிச் சிவஞானியாகி என்னிடம் வந்தார் என்பது.

**பதவுரை:** உளன் இலன் என்று எல்லாம் உரைக்கும் ஒருவன் - உள்ளவன் இல்லாதவன் என்றெல்லாம் பலராலும் பேசப்படும் ஒருவனாகிய சிவபிரான், இங்கு - இவ்வுலகில், அளவு அறிந்து ஆள்வான் - என்பக்குவ நிலை அறிந்து ஆட்கொள்ள வேண்டி, வளமை திருக்கோலம் கொண்டு - வளமான துறவுக் கோலம் கொண்டு, சிவஞானி ஆகி - சிவஞானி எனும் பெயருடையவராக ஆகி, இருக்குஓல– வேதம் ஒலிக்க, எனக்கு வந்தான் – என்னிடம் வந்தார் என்றவாறு

**குறிப்புரை:** தத்துவ வாதிகள் யாவரும் இறைவன் ஒருவன் உளன் என்றும் இலன் என்றும் தத்தம் அறிவு விளக்கத்துக்கு ஏற்பக் கூறுவர். மக்களில் நினைத்தன கிடைக்கப் பெற்றார் உண்டு என்றும் பெறாதார் இல்லை என்றும் கூறுவர் என்க உரைக்கும் என்பதை உரைக்கப்படும் எனச் செயப்பாட்டு வினையாக்குக. அளவு - பக்குவமுதிர் நிலை ஏ, போல என்பன அசைகள் திருக்கோலத்துக்கு வளமையாவது காண்பவர் சிவனே என வணங்கும் தன்மையும் அருட்செயல் வளமும் ஆம். இருக்கு என்றது இருக்கு யசுர் சாமம் அதர்வம் எனும் வேதம் நான்கையும் குறிக்கும். ஒலித்தலாவது ஒலித்துத் தேடிவருதல். எனக்கு என்பது என்னிடத்தில் என வேற்றுமை மயக்கம்.

## கட்டளைக் கலித்துறை

24. எனக்கினி யானென உரைக்கினி
யானெனைப் போலும்பொல்லா
மனக்கினி யானினி யான்செய்
பிழைக்கு மகிழினியான்
தனக்கினி யாரவர் வாழ்மயி
லத்திருத் தண்சயிலன்
உனக்கினி யானலன் கண்டாய்
பிழைத்துச்செல் ஊழ்வினையே.

**கருத்துரை:** என் ஊழ் வினையே! மயில மலையாராகிய சிவஞானியானவர் எனக்கு இனியராவார்; உனக்கு இனியர் அல்லர்; ஆதலின் என்னிடமிருந்து பிழைத்துப் போய்விடுக என்பது.

**பதவுரை:** ஊழ்வினையே – என் ஊழ்வினையே!, தனக்குஇனியார்அவர்வாழ் – தமக்கு இனியராகிய அடியவர் வாழ்கின்ற, திரு தண் மயிலச் சயில்ன் – வளமான குளிர்ந்த மயில மலையாராகிய சிவஞானி யானவர், எனக்கு இனியான் – எனக்கு இனியவர்; என் உரைக்கு இனியான் – என் பேச்சுக்கு இனியவர், எனைப் போலும் பொல்லா மனக்கு இனியான் – என் போல் உள்ள பொல்லாத என் மனத்துக்கும் இனியவர், இனி – இப்போது, யான் செய்பிழைக்கு மகிழ் இனியான் – யான் செய்கின்ற பிழைகளைக் கண்டும் மகிழும் இனியவர்; ஆதலின், உனக்கு இனியான் அலன் – உனக்கு இனியவர் அல்லர்; பிழைத்துச் செல் – என்னை விட்டுத் தப்பிச் செல்வாயாக என்றவாறு.

**குறிப்புரை:** எனக்கு என்றது உயிரை. பொல்லா மனம் - குற்றமுள்ள மனம். உயிரையும் மனதையும் தனி நிறுத்திக் கூறியபடி. உயிர் ஆணவ மலத்தால் பொல்லாதது; மனம் நினைவால் பொல்லாதது. பொல்லா மனதுக்கும் செய்பிழைக்கும் இனியராவது பொல்லா உணர்வையும் செய்பிழையையும் அறியாமையால் நிகழ்வன என்று பொறுத்து அடியவன் ஆக்குதல். செய்பிழைக்கு மகிழ்தலாவது விரும்பிப் போக்குதல். கண்டாய் முன்னிலையசை. இனியான் என்பது பல்கால் வந்த சொற்பொருட் பின்வரு நிலையணி.

**நிலைமண்டில ஆசிரியப்பா**

25. ஊழ்வினை வழிச்செல்என் பாழ்மதி தனக்குத்
தந்திரம் கோடி மந்தணம் உரைத்தும்
என்வழி வராது தன்வழி யீர்த்தெனை
வஞ்சகம் குறளை தஞ்சம் இல்கொலை
பொய்ம்மை யாதிய புகல்அறப் பகையெலாம்
ஆஅற்று வித்தே ஆணவச் சூர்முதற்கு
அமைச்செனக் குயிற்றுவித்து ஆட்டலான் அமரரின்
ஈனம் சுமந்தே யிளைத்தனன் மயிலத்து
ஐயநின் அருள்மொழி அயிலினை விடுத்து
மையறுத் தருள்மதி வையம்வாழ்த் துறவே.

**கருத்துரை:** மயிலத்து ஐய! என் மனமானது, யான் பல நூல்களில் உள்ள மறைபொருள்களைக் கூறியும் என்வழி வராமல், தன்வழியே என்னை இழுத்துச் சென்று, ஆணவம் என்ற அசுரனுக்கு அமைச்சர்களாக வஞ்சகம் புறங்கூறல் கொலை பொய் முதலான அறப்பகைகளை அமைத்து, என்னையாட்டுவதால், யான் சூரபதுமனுக்கு அஞ்சிய தேவர்போல இழிவைச் சுமந்தே இளைத்தேன்;

நீர் நுமது உபதேசம் எனும் வேலால் அந்த அறப் பகைகளுக்குக் காரணமான அஞ்ஞானத்தைப் போக்கி யருள்வீராக என்பது.

**பதவுரை:** மயிலத்துஐய – மயிலத்துள்ள குருநாதரே!, என் – எனது, ஊழ்வினை வழிசெல் பாழ்மதி – ஊழ்வினை வழியே செல்லும் பாழான மதியானது, தனக்கு – அதற்கு, கோடி தந்திர மந்தணம் உரைத்தும் – பல நூல்களில் விளக்கப்பட்டுள்ள உண்மைப் பொருளைச் சொல்லியும், என் வழி வாராது – என் வழி வாராமல், தன்வழி ஈர்த்து – தன் வழியே இழுத்துச் சென்று, வஞ்சகம் – வஞ்சகமும், குறளை – புறங்கூறலும், தஞ்சம்இல் கொலை – பெருமையில்லாத கொலையும், பொய்மை ஆதிய – பொய்யும் முதலான, புகல் – தீயனவாகப் பேசப்படுகின்ற, அறப்பகை எலாம் – அறத்துக்குப் பகையான அப்பாவச் செயல்களை எல்லாம், ஆஅற்று வித்து – வலிமைப்படுத்தி, ஆணவம் சூர் முதற்கு – ஆணவம் என்ற சூரனாகிய காரணத்துக்கு, அமைச்சு என குயிற்றுவித்து – அமைச்சர்கள் என்று அமைத்து, எனை ஆட்டலால் – என்னை ஆட்டுகின்ற காரணத்தால், அமரரின் – சூரனால் ஆட்டப்பட்ட தேவர்போல, ஈனம் சுமந்து இளைத்தனன் – இழிவைச் சுமந்து இளைத்தேன்; வையகம் வாழ்த்த – நும் அருட்செயல் கண்டு இவ்வுலகம் நும்மை வாழ்த்தும்படி, நின் அருள்மொழி அயிலினை விடுத்து–நும் உபதேச மொழியாகிய வேலாயுதத்தினை விடுத்து, மை அறுத்தருள் – அறப்பகைக்கெல்லாம் காரணமாகிய அஞ்ஞானத்தைப் போக்கியருள்க என்றவாறு.

**குறிப்புரை:** தன் வழிச் செல்லாமல் ஊழ் வழிச் செல்வதால் மதி பாழ்மதி எனப்பட்டது. கோடி தந்திரம் – பல நூல்கள். மந்தணம் மறைவு; அது அறவுரைகளைக் குறித்தது. தஞ்சம் – பெருமை. வஞ்சகம் முதலியன

அறப்பன்கள் என்றபடி. ஆற்றுவித்தல் – வலிமைப் படுத்துதல். வலிமைப்படுத்துதலின் வலிமை தோன்ற ஆஅற்றுவித்து என அளபெடையில் கூறப்பட்டது. வஞ்சகம் முதலியவற்றுக்கு ஆணவம் முதற் காரணம் ஆதலின் அது முதல் எனப்பட்டது. குயிற்றுவித்தல் – பதிய வைத்தல். ஈனம் – இழிந்த துன்பம். அருள்மொழி என்றது உபதேச மொழியை. அயில் கூர்மை; அது கூரிய வேலையுணர்த்தியது. மை – இருள்; அஞ்ஞானம். மதி முன்னிலையசை. ஏகாரம் ஈற்றசை.

**வெண்பா**

26. உறவெனக்கார் என்னை விடாதுற்று நான்செல்லும்
பிறவிதொறும் வந்த பெருமான் — மறுபிறவிச்
செல்லுகைக்கிங் கஞ்சேன் சிவஞானி என்பகையை
வெல்லுகைக்கு நீயிருக்க வே.

**கருத்துரை:** சிவஞானியே! என் பிறவிதோறும் உடனாய் வந்த பெருமானாக, என்பகையை வெல்லுதற்கு நீர் இருக்க, இனியான் எடுக்கும் மறுபிறவிக்கு யான் அஞ்சேன்; உம்மைத்தவிர எனக்கு உறவு யார்உளர்? என்பது.

**பதவுரை:** சிவஞானி – சிவஞானியே!, என் பகையை வெல்லுகைக்கு–எனக்குள்ள பகையை வென்று காப்பதற்கு, நான் செல்லும் பிறவி தொறும் – யான் எடுக்கும் பிறவிகள் தோறும், விடாது உற்று வந்த பெருமான் – நீங்காமல் உடன் பொருந்தி வந்த பெருமான் ஆகிய, நீ இருக்க – நீர் துணையாக இருக்கும் காரணத்தால், இங்கு மறுபிறவி செல்லுகைக்கு அஞ்சேன் – இவ்வுலகில் மறுபிறவியில் போர்வதற்கு அஞ்ச மாட்டேன்; எனக்கு உறவு ஆர்–எனக்கு உறவு ஆவார் வேறு யார் உளர்? இல்லை என்றவாறு.

**குறிப்புரை:** இறைவன் எங்கும் நிறைந்தவர் ஆதலின் உயிரிடத்தும் எப்போதும் கலந்திருப்பர். உயிர் ஆணவத்தால் கட்டுண்டபோதும் தானும் கட்டுண்டவர் போல் பொருந்தியிருப்பர். உயிர் அறிவு பெறும்போது அவ்வறிவினைத் தானும் மேலும் விளங்கச் செய்வர் அதனால் உயிர் எத்தனைப்பிறவி எடுத்தாலும் அப்பிறவிகளில் தானும் தங்கியிருத்தலின் பிறவிதொறும் வந்த பெருமான் என்றார். பகையாவன ஆணவம் கன்மம்மாயை எனும் மும்மலங்கள். அவற்றை வெல்லுதலாவது அவற்றால் வரும் அறியாமையை அடக்கல். ஏகாரம் ஈற்றசை.

### கட்டளைக் கலித்துறை

27. வேண்டாமை வேண்டுநர் வேண்டுக
யான்நிதம் வேண்டுவதே
ஈண்டாக என்பன் எனக்குன்
அடியார் இயல்பணிக்கே
ஆண்டா யதனின் அணிசேர்
மயிலத் தருட்குன்றமே
தூண்டா விளக்கனை யாய்சிவ
ஞானத் தொழுகுலமே.

**கருத்துரை:** சிவஞான தேசிகராகிய எம் குலதெய்வமே! வேண்டாமை வேண்டுவார் வேண்டுக நும் அடியவர்க்காகும் தொண்டு செய்வதற்கே என்னை ஆட்கொண்டீர் ஆதலால் இவ்வுலகில் யான்நாடோறும் வேண்டுவதேயாகுக என்பேன் என்பது.

**பதவுரை:** அணிசேர் மயிலத்து அருட்குன்றமே – அழகு சேர்ந்த மயிலத்தில் உள்ள அருள் மலையே!, தூண்டா விளக்கு அனையாய் – தூண்டா விளக்கு ஒப்பவரே!,

சிவஞானத் தொழுகுலமே - சிவஞானக் குலதெய்வமே!, வேண்டாமை வேண்டுநர் வேண்டுக - நும்மிடம் வேண்டாமையை வேண்டிக் கொள்வார் வேண்டிக் கொள்க; உன் அடியார் இயல் பணிக்கே ஆண்டாய் அதனின் - நும் அடியவர்க்கு ஆகும் தொண்டு செய்வதற்கே என்னை ஆட்கொண்டீர் ஆதலால், நிதம் - நாடோறும், யான் - அடியேன், வேண்டுவதே - அவர் பொருட்டு வேண்டும் வரங்களே, எனக்கு ஈண்டு ஆக என்பேன் - எனக்கு இவ்வுலகில் வாய்ப்பனவாக என்று வேண்டுவேன் என்றவாறு.

**குறிப்புரை:** வேண்டாமை - எப்பொருளையும் விரும்பாமை. விரும்புவதால் துன்பமே வருதலின் வேண்டாமையைச் சிறந்த செல்வம் என்றார் திருவள்ளுவர். "வேண்டாமையன்ன விழுச்செல்வம்" என்பது அவர்வாக்கு. இயல்பணி - செய்யும் தொண்டு. மயிலத்து அருட் குன்றம் என்றது மலைமேல் மலை என்னும் நயம் உடையது. தொழுகுலம் - குல தெய்வம். குலம் என்பது கோயில் எனும் பொருளுடையதாய்க் கடவுளைக் குறித்தது; ஆகுபெயர். அருட்குன்றமே எனக் கனிச்சீர் வந்தது.

### நேரிசையாசிரியப்பா

28. தொழுகுல மணியே! சுகப்பெருங் கடலே!
வழுவறு கருணை மலையே! மனோரதச்
சித்தித் திருவே! தேவர்கள் நிதியே!
முத்தி முதலே! முழுச்சுவை கனிந்த
சைவக் கனியே! தவத்தெழும் அமுதே!
மெய்வைத்த சிந்தை விளக்கே! மயிலத்து
அண்ணலே! அரசே! அப்பனே! அம்மே!

கண்ணினுள் மணியே! காதலே! நாயேன்!
உள்நயந் திருந்த ஒருவா! என்ன
ஆசை யனைத்தும் ஆகப்
பேசிக் கிடவாய்; பேதைஎன் நெஞ்சே.

**கருத்துரை:** பேதையாகிய என் நெஞ்சமே! உன் ஆசை அனைத்தையும் சேர்த்து தொழுகுலமணியே என்பது முதலாகப் பல்வாறு சிவஞானியைப் புகழ்ந்து பேசிக் கிடப்பாயாக என்பது.

**பதவுரை:** பேதை என் நெஞ்சமே - பேதையாகிய என் நெஞ்சமே! ஆசை அனைத்தும் ஆக - ஆசை அனைத்தும் நிறைவேற, தொழுகுல மணியே - யாம் தொழும் குல மணியே!, பெரும் சுகக்கடலே - பெரிய இன்பக் கடலே!, வழு அறு கருணை மலையே - குற்றம் போக்கும் அருள் மலையே!, மனோரத சித்தி திருவே - மனவிருப்பத்தை நிறைவேற்றும் செல்வமே!, தேவர்கள் நிதியே - தேவர் செல்வமே!, முத்தி முதலே - முத்திக்கு முதலே!, முழு கனிந்த சுவை சைவக் கனியே - பெரிய கனிந்த சுவையுடைய வீர சைவக்கனியே!, தவத்து எழும் அமுதே- தவத்தின் முடிவில் தோன்றும் அமுதமே! மெய் வைத்த சிந்தை விளக்கே - மெய்ப் பொருளை நினைத்த சிந்தையில் ஒளிரும் விளக்கே!, மயிலத்து அண்ணலே - மயிலத்துப் பெரியோரே!, அரசே - அரசே!, அப்பனே - தந்தையே!, அம்மே - தாயே!, கண்ணின் உள் மணியே - கண்ணின் உள்ளே உள்ள கருமணியே!, காதலே - அன்பு வடிவமே!, நாயேன் உள்நயந்து இருந்த ஒருவா - நாயேனின் உள்ளத்தே விரும்பித் தங்கியுள்ள ஒப்பற்றவரே!, என்ன - இப்படியாக, பேசிக் கிடவாய் - சிவஞானியைப் புகழ்ந்து கொண்டே கிடப்பாயாக என்றவாறு.

**குறிப்புரை:** சைவம் என்றது வீர சைவத்தை. ஆக - நிறைவேற. கிடத்தல் வேறு நினைவோ தொழிலோ இன்றியிருத்தல்.

**வெண்பா**

29. என்னெஞ்சே போலும் எனக்கினியார்
யார்எனக்கிங்(கு
அன்னம் செறியும் அணிவயல்சூழ் - தன்னிகரும்
மாயூர வெற்பன் மலர்த்தாள் திருத்தொண்டர்க்(கு)
ஆயூறி லாததுணை யாம்.

**கருத்துரை:** என் நெஞ்சம் போல் எனக்கு இனியவர் யாருளர்? யாரும் இல்லை. ஏன் எனின் மயிலத்துச் சிவஞானியின் திருவடித் தொண்டர்க்குரியதாய் துன்பம் இல்லாத துணை ஆம் ஆதலின் என்பது.

**பதவுரை:** அன்னம் செறியும் - அன்னங்கள் நெருங்கி இருக்கின்ற, அணிவயல்சூழ் - அழகிய வயல்கள் சூழ்ந்துள்ள, தன் நிகரும் - தனக்குத் தானே நிகராகக் கூடிய, மாயூர வெற்பன் - மயில மலைச் சிவஞானியின், மலர் தாள் தொண்டர்க்கு ஆய் - தாமரை மலர் போலும் திருவடிக்குத் தொண்டு செய்பவர்க்கு உரியதாய், ஊறு இலாத துணை ஆம் - அழியாத துணையாகும் ஆதலினால், எனக்கு - அடியேனுக்கு, என் நெஞ்சம் பாலும் இனியார் - என் மனம் போலும் நல்லவர், இங்கு எனக்கு யார் - இங்கே எனக்கு யார் உளர்; இல்லை என்றவாறு.

**குறிப்புரை:** நெஞ்சம் சிவஞானியின் தொண்டர்க்கு உரியதாய் நீங்காத துணையாக இருத்தலின் அதுபோல நல்லவர் இல்லை என்றபடி. எனக்கு இரண்டனுள் பின்னது வாளா நின்றது. அன்னம் என்றது நெல் எனக்

கோடலும் ஆம்; அது காரணம் காரியமாகக் கூறப்பட்டதாம். ஊறு இலதாய் என்பதற்கு இடையூறு செய்யாததாய் எனினும் ஆம். ஆதலின் என ஒரு சொல் வருவிக்க.

### கட்டளைக் கலித்துறை

30. ஆரண ஆகம மாயக் கிடந்தன அண்டரண்ட
காரணம் ஆயின காதலிப் பார்தங்கள் காதலெலாம்
வாரணம் ஆக மலிவித் தனமயி லத்தமர்ந்த
பூரணன் எங்கள் சிவஞானி தன்னிரு பூங்கழலே.

**கருத்துரை:** மயிலத்துள்ள எங்கள் சிவஞானியின் திருவடிகளே, வேதமும் ஆகமமும் ஆய்ந்து கொண்டு இருக்கும்படியாக உள்ளன. தேவலோகம் பொலிவதற்குக் காரணம் ஆயின; காதலர் காதலைக் கடல் போலப் பெருகச் செய்தன என்பது.

**பதவுரை:** மயிலாசலத்து அமர்ந்த பூரணன் - மயில மலையில் அமர்ந்துள்ள பூரணனாகிய, எங்கள் சிவஞானி - எங்கள் சிவஞானியின், இரு பூம் கழலே - இரண்டு பொலிவுள்ள திருவடிகளே, ஆரணம் ஆகமம் ஆயக்கிடந்தன - வேதமும் ஆகமமும் ஆராய்ந்து கொண்டிருக்குமாறு கிடந்தன; அண்டா அண்டம் காரணம் ஆயின - தேவரின் தேவலோகம் சிறப்பதற்குக் காரணம் ஆயின; காதலிப்பார் தங்கள் - தம்மை விரும்பும் அடியவர்களின், காதல்எலாம் - விருப்பம் எல்லாவற்றையும், வாரணம் ஆகமலிவித்தன - கடல்போலப் பெருகச் செய்தன என்றவாறு.

**குறிப்புரை:** ஆரணமும் ஆகமமும் திருவடிப் பெருமையை ஆராய்ந்து அறிய முடியாமல் மாயுமாறு கிடந்தன எனினும் ஆம். அண்டர் - தேவர். அண்டரண்டத் தோற்றக் காரணம் ஆயின எனினும் ஆம்; அதனால் பிற உலகத் தோற்றக்

காரணமும் ஆயின என்க. காதல் - விருப்பம். வாரணம் - கடல். வாரணமாக மலிவித்தல் - கடல் போலப் பெருகச் செய்தல். ஏகாரம் ஈற்றசை.

காயாறு ஞானசுந்தரையர் இயற்றிய சிவஞான பாலைய சுவாமிகள் மும்மணிக்கோவை மூலமும், மயிலம் - பொம்மபுர ஆதீனப் புலவர் ஆ. சிவலிங்கனார் எழுதிய உரையும் முற்றும்.

## பாட்டு முதற் குறிப்பகராதி

(முன் எண் பாட்டெண்; பின்எண் பக்கஎண்)

## மயிலம் பொம்மபுர ஆதீன வெளியீடுகள்

| எண் | நூலின் பெயர் | ஆண்டு | விலை |
|---|---|---|---|
| 20. | இட்டலிங்க அபிடேக மாலை (மூலமும் பழைய உரையும்) | 1965 | |
| 21. | காசி வழித்துணை விளக்கம் | 1965 | |
| 22. | ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் நெஞ்சுவிடு தூது (மூலமும் – குறிப்புரையும்) | 1966 | |
| 23. | நெடுங்கழி நெடில், குறுங்கழி நெடில் (மூலமும் – உரையும்) | 1967 | |
| 24 | ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் பிள்ளைத்தமிழ் (மூலமும் – உரையும்) | 1968 | |
| 25. | கைத்தல மாலை, சிவநாம மகிமை (மூலமும் – உரையும்) | 1969 | |
| 26. | ஸ்ரீ பசவேசர் பொன்மொழிகள் 1–ஆம் பகுதி | 1987 | 5.00 |
| 27. | ஸ்ரீ பசவேசர் பொன்மொழிகள் 2–ஆம் பகுதி | 1988 | 5.00 |
| 28 | ஸ்ரீ பசவேசர் பொன்மொழிகள் 3–ஆம் பகுதி | 1989 | 5.00 |
| 29. | நிரஞ்சன மாலை (மூலமும் – உரையும்) | 1990 | 10.00 |
| 30. | ஸ்ரீ பசவேசர் பொன்மொழிகள் 4–ஆம் பகுதி | 1990 | 5.00 |
| 31. | ஸ்ரீ பசவேசர் பொன்மொழிகள் 5–ஆம் பகுதி | 1991 | 5.00 |

| | | | |
|---|---|---|---|
| 32. | ஸ்ரீ பசவேசர் பொன்மொழிகள் 6-ஆம் பகுதி | 1992 | 5.00 |
| 33. | ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் தாலாட்டு (மூலமும் – உரையும்) | 1992 | 20.00 |
| 34. | ஸ்ரீ பசவேசர் பொன்மொழிகள் 7-ஆம் பகுதி | 1993 | 5.00 |
| 35. | அல்லமபிரபு தேவர் சடுத்தலம் | 1993 | 5.00 |
| 36. | ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் திருப்பள்ளியெழுச்சி (மூலமும் – உரையும்) | 1993 | 3.00 |
| 37. | சோணசைல மாலை, நால்வர் நான்மணிமாலை, நன்னெறி மூலம் | 1993 | 12 00 |
| 38. | இட்டலிங்கப் பெருமான் ஸ்தோத்திரத் திரட்டு | 1993 | 4.00 |
| 39. | ஸ்ரீ பசவேசர் பொன்மொழிகள் 8-ஆம் பகுதி | 1994 | 5.00 |
| 40. | மிசிர சடுத்தலம் (குறிப்புரை) | 1994 | 4.00 |
| 41. | சோணசைல மாலை நூலாய்வு | 1994 | 36.00 |
| 42. | நால்வர் நான்மணிமாலை ஓர் ஆய்வு | 1994 | 36.00 |
| 43. | திருச்செந்தில் நீரோட்டக யமக அந்தாதி, பழமலை அந்தாதி (மூலமும் – உரையும்) | 1994 | 23.00 |
| 44. | ஸ்ரீ பசவேசர் பொன்மொழிகள் 9-ஆம் பகுதி | 1995 | 5.00 |
| 45. | ஸ்ரீ சிவஞான பாலய சுவாமிகள் நெஞ்சு விடு தூது | 1995 | 33.00 |
| 46. | பெரியநாயகி அம்மை கலித்துறை (மூலமும் – உரையும்) | 1995 | 15.00 |

| | | | |
|---|---|---|---|
| 47. | ஸ்ரீ பசவேசர் பொன்மொழிகள் 10-ஆம் பகுதி | 1996 | 5.00 |
| 48. | பரம ரகசிய சடுத்தலம் (மூலமும் - பழைய உரையும்) | 1996 | 18.00 |
| 49. | ஸ்ரீ பிச்சாடன நவமணிமாலை (மூலமும் - உரையும்) | 1996 | 5.00 |
| 50. | ஸ்ரீ பசவேசர் பொன்மொழிகள் 11-ஆம் பகுதி | 1997 | 5.00 |
| 51. | சிவ சடுத்தல சாரம், சிவயோக இலக்கணம், அக்கமாதேவி திருட்டி | 1997 | 7.00 |
| 52. | திருவெங்கைக் கலம்பகம் (மூலமும் - உரையும்) | 1997 | 40.00 |
| 53. | திருவெங்கையுலா (மூலமும் - உரையும்) | 1998 | 60.00 |
| 54. | ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் தனிப்பாடல்கள் (மூலமும் - உரையும்) | 1998 | 16.00 |
| 55. | ஸ்ரீலஸ்ரீ சிவஞான [illegible] சுவாமிகள் அட்டகம், போற்றிப் பஞ்சகம் | 1999 | 12.00 |
| 56. | பாலய சுவாமிகள் பதிற்றுப்பத்தந்தாதி | 1999 | 30.00 |
| 57. | திருக்கூவப் புராணம் (மூலமும் - உரையும்) | 1999 | 125.00 |
| 58. | ஸ்ரீ மகான் பசவேசர் | 1999 | — |
| 59. | ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் சீர்த்தி மாலைத்திரட்டு | 1999 | 30.00 |
| 60. | ஸ்ரீ சிவஞான பாலய தேசிகர் பனுவல் திரட்டு மூலமும் உரையும் | 2000 | 3.00 |
| 61. | சிவஞான பாலய சுவாமிகள் மும்மணிக்கோவை | 2000 | — |